# பிள்ளைப் பாட்டு

ப. வ. ராம., இராயவரம்.



தொகுப்பும் உரையும்

ராய. சொ.

# பிள்ளைப் பாட்டு

இராயவரம்

ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்

மகள் நிறைநாட்செல்வி

**அடைக்கம்மை புதுமைப் பூ**

ஜய - சித்திரை - ௪.




தொகுப்பும் உரையும்

ராய. சொ.

# நூல் முகம்

பிள்ளைப் பாட்டு இந்நூலின் பெயர். பல நூல்களின் தொகுப்பு இந்நூல். பிள்ளைத் தன்மையைப் பாடிய பாடல்களின் பொறுக்கு மணிகள் இந்நூலில் கோக்கப் பெற்றிருக்கின்றன. திருமால், அம்பிகை, முருகன், காந்தி ஆகியவர்களைப் பிள்ளைகளாக்கிப் பாடிய பாடல்களையும் தாலாட்டையும் கொண்டு விளங்குவது இந்நூல்.

பிள்ளைப் பாட்டு ஓர் அருமைப் பிள்ளையின் ஆண்டு நிறைவின் நினைவாகத் தோன்றுகிறது. அப்பிள்ளைதான் அடைக்கம்மை என்னும் செல்வி சீதை. அப்பிள்ளையின் தந்தையும் ஓர் குழந்தையே. ஆனால் அது பெரிய குழந்தை. நான் எப்போதும் அன்போடு 'குழந்தை' என்று அழைக்கும் எனது ஆருயிர்க் குழந்தையின் குழந்தை புதுமையில் மணம் பரப்பிப் பூக்கும் இப்பிள்ளைப் பாட்டின் பயனை அனைவரும் துய்க்க அம்பலத்தாடும் எம்பெருமான் அருள்வானாக.

ஜய - சித்திரை - ௪.

ராய. சொ.

# பிள்ளைப் பாட்டு

## உள்ளுறை

## உள்ளுறை - தொடர்

## நாலாயிரப் பிரபந்தம்

### இராமன் தாலாட்டு

மன்னுபுகழ்க் கௌசலைதன்
மணிவயிறு வாய்த்தவனே!
தென்இலங்கைக் கோன்முடிகள்
சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னிநன்மா மதிள்புடைசூழ்
கணபுரத்துஎன் கருமணியே!
என்னுடைய இன்அமுதே!
இராகவனே! தாலேலோ. க

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** நிலைபெற்ற புகழை உடைய கோசலையின் அழகிய வயிற்றில் பிறந்தவனே! தென் இலங்கை மன்னன் இராவணனின் பத்து மகுடங்களையும் சிதற அடித்தவனே!

சிறந்த தங்கத்தால் செய்யப்பெற்ற, பகைவரால் தீண்டக்கூட முடியாத, நல்ல பெரிய மதில்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே உறைகின்ற என்னுடைய கரிய மணியே! என் இனிய அமுதமே! இரகு குல திலகனே! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அருஞ்சொற்பொருள் :—** மன்னுதல் : நிலைபெறுதல். கன்னி : தொடப்படாதது. தாலாட்டுதல் : குழந்தைகளைத் தொட்டிலில் ஏற்றிப் பாடுதல். தால் : நாக்கு. திருக்கண்ணபுரம், நன்னிலத்துக்கு அணித்தேயுள்ள தலம்.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

புண்டரிக மலரதன்மேல்
புவனியெலாம் படைத்தவனே!
திண்திறலாள் தாடகைதன்
உரம்உருவச் சிலைவளைத்தாய்!
கண்டவர்தம் மனம்வழங்கும்
கணபுரத்துஎன் கருமணியே!
எண்திசையும் ஆளுடையாய்!
க இராகவனே! தாலேலோ. உ

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** நின் உந்தித் தாமரைப் பூவின்மீது பிரமனைப் படைத்து, அவனைக்கொண்டு உலகத்தை யெல்லாம் உண்டாக்கியவனே!

பேர் ஆற்றல் கொண்ட தாடகையின் மார்பை அம்பு ஊடுருவிச் செல்லுமாறு வில்லை வளைத்தவனே!

பார்த்தவர் மனத்தைப் பறிகொடுக்கும் சிறப்பு வாய்ந்த திருக்கண்ணபுரத்தின் எனது கரு மாணிக்கமே!

எட்டுத் திக்குகளையும் ஆளுகின்றவனே! இராகவனே! உனக்குத் தாலாட்டு.

**அருஞ்சொற்பொருள் :—** புண்டரிகம் : தாமரை. புவனி : உலகம். திண்திறல் : மிக்க வலிமை. உரம் : மார்பு. சிலை : வில்.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

கொங்குமலி கருங்குழலாள்
கௌசலைதன் குலமதலாய்!
தங்குபெரும் புகழ்ச்சனகன்
திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்தமலி
கணபுரத்துஎன் கருமணியே!
எங்கள்குலத்து இன்அமுதே!
இராகவனே! தாலேலோ. ௩

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** மணம் நிறைந்த கருமையான கூந்தலையுடைய கோசலையின் மேலான மகனே!

பெரும் புகழ் தங்கிய சனக மன்னனின் சிறந்த மாப் பிள்ளையே! தசரதனின் மைந்தனே!

கங்கையைக் காட்டிலும் புனிதநீர் மல்கிய கண்ண புரத்தின் என் கருமணியே!

எங்கள் குலத்தின் இனிய அமுதமே! இராகவனே! தாலாட்டு.

**அரும்சொற்பொருள் :—** கொங்கு : வாசனை. குலம் : மேன்மை. தீர்த்தம் : புனிதம்.

ஸ்ரீ

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

தாமரைமேல் அயனவனைப்
படைத்தவனே! தயரதன்தன்
மாமதலாய்! மைதிலிதன்
மணவாளா! வண்டினங்கள்
கா,மரங்கள் இசைபாடும்
கணபுரத்துஎன் கருமணியே!
ஏமருவும் சிலைவலவா!
இராகவனே! தாலேலோ, ௪

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** தாமரைப் பூவின்மீது பிரமனைப் பெற்றவனே! தயரதச் சக்கரவர்த்தியின் பெருமகனே! சீதை நாயகா! வண்டுக் கூட்டங்கள் சோலை மரங்களிலே பண்பாடித் திரிகின்ற கண்ணபுரத்தின் என் கருமணியே! அம்பு தொடுக்கும் வில்தொழில் வல்லவனே! இராகவனே! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** அயன் : பிர்மா. மைதிலி : மிதிலை மன்னன் மகள்; சீதை. ஏ : அம்பு.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

பார்ஆளும் படர்செல்வம்
　　பரதநம்பிக் கேஅருளி
ஆராஅன்பு இளையவனோடு
　　அருங்கானம் அடைந்தவனே!
சீர்ஆளும் வரைமார்பா!
　　திருக்கண்ண புரத்துஅரசே!
தார்ஆளும் நீள்முடிஎன்
　　தாசரதீ! தாலேலோ. ௫

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** உலகை ஆளும் நிறைந்த செல்வத்தை, பரதனாகிய நம்பிக்கே கொடுத்து, வற்றாத அன்புகொண்ட இளையபெருமாளோடு அருமையான காட்டுக்குச் சென்றவனே!

திருமகளின் ஆளுகைக்கு உரிய மலைபோன்ற மார்பனே! திருக்கண்ணபுரத்து மன்னா!

மாலை அணிந்த நீண்ட முடியை உடைய தயரதன் மகனே! உனக்குத் தாலாட்டு.

**அரும்சொற்பொருள் :—** படர் செல்வம் : பெருகிய பொருள். நம்பி : ஆணிற் சிறந்தவன். சீர் : திருமகள். வரை : மலை.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

சுற்றம்எலாம் பின்தொடரத்
தொல்கானம் அடைந்தவனே !
அற்றவர்கட்கு அருமருந்தே !
அயோத்திநகர்க்கு அதிபதியே !
கற்றவர்கள் தாம்வாழும்
கணபுரத்துஎன் கருமணியே !
சிற்றவைதன் சொல்கொண்ட
சீராமா ! தாலேலோ, ௬

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** உறவினர் அனைவரும் பின்பற்றிவர, பழமையான காட்டுக்குப் போனவனே !

இல்லாதவர்க்கு அருமையான அமுதம் போன்றவனே ! அயோத்தி நகரத்தின் தலைவனே !

படித்தவர்கள் வாழ்கின்ற கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கின்ற என் கரிய மாணிக்கமே !

சிறிய தாயாகிய கைகேசி சொல்லைத் தலைமேல் தாங்கிக் கானகம் சென்ற இராமபிரானே ! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அருஞ்சொற்பொருள் :—** சுற்றம் : உறவு. தொல் : பழைய. சிற்றவை : சிறிய தாய்.

ஸ்ரீ

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

ஆலின்இலைப் பாலகனாய்
அன்றுஉலகம் உண்டவனே!
வாலியைக்கொன்று அரசுஇளைய
வானரத்துக்கு அளித்தவனே!
காலின்மணி கரைஅலைக்கும்
கணபுரத்துஎன் கருமணியே!
ஆலிநகர்க்கு அதிபதியே!
அயோத்திமனே! தாலேலோ. எ

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** ஆலமரத்தின் இலையின்மேல் குழந்தையாகக் கிடந்ததோடு அந்நாளில் உலகத்தைச் சாப்பிட்டவனே! வாலியைக் கொன்று அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்குக் கிட்கிந்தையின் அரசைக் கொடுத்தவனே! காவிரிக்காலின் வழியாக இரத்தினங்களை இருகரையிலும் வீசித் தள்ளுகின்ற கண்ணபுரத்தின் என் கருமணியே!

திருவாலி நகர் என்னும் தலத்தின் தலைவனே! அயோத்தி அரசே! உனக்குத் தாலாட்டு.

**அருஞ்சொற்பொருள் :—** கால் : பிரிவு; வாய்க்கால். ஆலிநகர் : திருவாலி என்னும் தலம்; இது நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளுள் ஒன்று; இதன் பகுதியிலேயே திருமங்கையாழ்வார் அவதரித்தார். இத்தலம் சீகாழிக்குத்தென்கிழக்கே ஆறு மைலில் இருக்கிறது.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

மலைஅதனால் அணைகட்டி
　　மதிள்இலங்கை அழித்தவனே!
அலைகடலைக் கடைந்துஅமரர்க்கு
　　அமுதுஅருளிச் செய்தவனே!
கலைவலவர் தாம்வாழும்
　　கணபுரத்துஎன் கருமணியே!
சிலைவலவா! சேவகனே!
　　சீராமா! தாலேலோ. அ

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :—** கற்களைக்கொண்டு சேது கட்டி அதன்மூலம் கடலைக் கடந்து மதில் சூழ்ந்த இலங்கையை அழித்தவனே!

அலை கடலைக் கடைந்து தேவர்க்கு அமிர்தம் கொடுத்தவனே!

கலை வல்லார் வாழ்கின்ற கண்ணபுரத்து நிற்கும் என் கருமணியே!

வில்வல்லவனே! வீரனே! இராமபிரானே! தாலாட்டு.

**அருஞ்சொற்பொருள் :—** சேவகம் : வீரம்.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

தளைஅவிழும் நறும்குஞ்சித்
    தயரதன்தன் குலமதலாய்!
வளையஒரு சிலைஅதனுல்
    மதிள்இலங்கை அழித்தவனே!
களைகழுநீர் மருங்குஅலரும்
    கணபுரத்துஎன் கருமணியே!
இளையவர்கட்கு அருள்உடையாய்!
    இராகவனே! தாலேலோ. க

—குலசேகர ஆழ்வார்

**கருத்து :**—கட்டு அவிழ்ந்த நல்ல சிகையைப்பெற்ற, தயரதனுடைய குலமகனே!

ஒரே வில்லாகிய கோதண்டத்தால் மதில் இலங்கையை முழுதும் தொலைத்தவனே!

களையாகக் கழுநீர்ப் பூக்கள் நெல்லின் பக்கத்திலே பூக்கும் கண்ணபுரத்து என் கருமணியே!

இளையவர்களிடத்திலே கருணையுள்ளவனே! இராகவனே! தாலாட்டு.

**அரும்சொற்பொருள் :**— தளை : கட்டு. குஞ்சி : ஆண் தலை மயிர். வளைய : ஒருசேர. களை : பயிர்க்கு இடையூருக முளைக்கும் நீக்கத்தக்க பொருள். கழுநீர் : நீலோற்பலம். மருங்கு : பக்கம். அலர்தல் : பூத்தல்.

# நாலாயிரப் பிரபந்தம்

## இராமன் தாலாட்டு

தேவரையும் அசுரரையும்
திசைகளையும் படைத்தவனே !
யாவரும்வந்து அடிவணங்க
அரங்கநகர்த் துயின்றவனே !
காவிரிநல் நதிபாயும்
கணபுரத்துஎன் கருமணியே !
ஏவரிவெம் சிலைவலவா !
இராகவனே ! தாலேலோ. கO

*—குலசேகர ஆழ்வார்*

**கருத்து :—** அமரரையும் அவுணரையும் திக்குகளையும் உண்டாக்கியவனே !

அனைவரும் வந்து திருவடியைத் தொழத் திருவரங்க நகரத்திலே பள்ளி கொண்டவனே !

நல்ல காவிரியாறு பாய்கின்ற கண்ணபுரத்தின் என்னுடைய கரிய மணியே !

அம்பு எய்யும் கட்டு அமைந்த கொடிய வில் வல்லவனே! இராகவனே ! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** அசுரர் : அவுணர் ; இவர்கள் தேவர்களின் பகைவர். ஏ : பாணம். வரி : கட்டு.

# நாலாயிரப் பிரபந்தம்

## கண்ணனைப் பூச்சூட அழைத்தல்

ஆன்நிரை மேய்க்கநீ போதி;
அருமருந்து ஆவது அறியாய்!
கானகம் எல்லாம் திரிந்துஉன்
கரிய திருமேனி வாட,
பானையில் பாலைப் பருகிப்
பற்றுதார் எல்லாம் சிரிப்ப,
தேனில் இனிய பிரானே!
செண்பகப் பூச்சூட்ட வாராய். கக

—*பெரியாழ்வார்*

**கருத்து :—** பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டு நீ மேய்க்கச் செல்லுகின்றாய்; நீ அருமையான அமுதம் என்பதை அறிய மாட்டாய்.

காடெல்லாம் சுற்றி நினது கரிய அழகிய உடம்பு வாட நீ அவ்வாறு செய்கின்றாய்.

தாழியில் உள்ள பாலைக் குடித்து மாற்றார் அனைவரும் நகைக்க நிற்கும், தேனைவிடச் சுவையான பிள்ளைப் பெருமானே! இங்கே வா, செண்பகப்பூச் சூட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** ஆன் : பசு. நிரை : வரிசை. மருந்து : அமிழ்தம். பற்றுதார் : அன்பில்லாதவர்.

# நாலாயிரப் பிரபந்தம்

## சந்திரனைக் கண்ணனோடு விளையாட அழைத்தல்

தாழியில் வெண்ணெய் தடங்கை
ஆர விழுங்கிய
பேழை வயிற்றுஎம் பிரான்கண்
டாய்உன்னைக் கூவுகின்றான்;
ஆழிகொண்டு உன்னை எறியும்;
ஐயுறவு இல்லைகாண்!
வாழ உறுதியேல் மாம
தீ! மகிழ்ந்து ஓடிவா. கஉ

—*பெரியாழ்வார்*

**கருத்து :—** பெரிய சந்திரனே! பானையில் உள்ள வெண்ணெயைப் பெருங்கை நிறைய அள்ளி உண்ட பெட்டகம் போன்ற வயிற்றையுடைய எம் கண்ணபிரான் உன்னைக் கூப்பிடுகின்றான்; தெரியுதா?

உனக்கு வாழவேண்டும் என்ற எண்ணம் இருக்குமானால் எக்களிப்போடு ஓடிவா.

நீ வராவிட்டால் சக்கராயுதத்தை விட்டு உன்னைத் தொலைத்து விடுவான்; இதில் ஒன்றும் சந்தேகத்திற்கே இடமில்லை.

**அருஞ்சொற்பொருள் :—** ஆர : நிறைய. ஆழி : சக்கரம். ஐயுறவு : சந்தேகம்.

# நாலாயிரப் பிரபந்தம்

## கண்ணன் பிறப்பைக் காண்கின்றனர்.

பேணிச் சீர்உடைப்
    பிள்ளை பிறந்தினில்
காணத் தாம்புகு
    வார்; புக்குப் போதுவார்;
" ஆண்ஒப் பார்இவன்
    நேர்இல்லை காண்!" திரு
" ஓணத் தான்உலகு
    ஆளும் " என் பார்களே. கரு

—பெரியாழ்வார்

**கருத்து :—** பேணத் தகைய சிறந்த கண்ணன் என்னும் பிள்ளை பிறந்த இன்ப மாளிகைக்குப் பிள்ளையைக் காண எல்லோரும் செல்லுவார்; சென்று திரும்புவார்;

" ஆண்களிலே இவனுக்குச் சமமானவரே கிடையாது" எனவும் "ஓண நட்சத்திரத்திலே பிறந்தவன் உலகத்தை ஆள்வான்" எனவும் அவர்கள் பேசிக்கொண்டார்கள்.

" ஓணத்தான் உலகு ஆளும் " என்பது பழமொழி.

**அரும்சொற்பொருள் :—** 'பிறந்தினில்' என்பதை பிறந்த இன் இல் எனப் பிரித்து 'பிறந்த இனிய வீடு' எனப் பொருள் கொள்க.

# நாலாயிரப் பிரபந்தம்

## பிள்ளை வாய்க்குள் உலகம்

கையும் காலும்
நிமிர்த்துக் கடாரநீர்
பைய ஆட்டிப்
பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித்
தாளுக்குஅங் காந்திட
வையம் ஏழுங்கண்
டாள் ; பிள்ளை வாயுளே. கசு

—*பெரியாழ்வார்*

**கருத்து :—** பிள்ளையைக் கையையும் காலையும் நிமிர்த்து விட்டு, அண்டாவிலிருந்த நீரில் மெதுவாகக்குளிப்பாட்டி, பசுமையான மஞ்சள் துண்டத்தைக்கொண்டு மென்மை யான நாக்கை வழித்தாள், அன்னை யசோதை;

குழந்தை வாயைத் திறந்தவுடன் ஏழு உலகத்தையும் தன் பிள்ளை வாயுள்ளே கண்டாள்.

**அரும்சொற்பொருள் :—** கடாரம் : பாத்திரம். அங்காத் தல் : வாய்திறத்தல். வையம் : உலகம்.

## நாலாயிரப் பிரபந்தம்

### கண்ணனைப் பால் குடிக்க அழைத்தல்

வைத்தநெய்யும் காய்ந்தபாலும்
வடிதயிரும் நறுவெண்ணெயும்
இத்தனையும் பெற்றுஅறியேன் ;
எம்பிரான் ! நீ பிறந்தபின்னை.
எத்தனையும் செய்யப்பெற்றாய் !
ஏதும்செய்யேன் ; கதம்படாதே !
முத்தனைய முறுவல்செய்து
மூக்குஉறிஞ்சி முலையுணாயே. கரு

—*பெரியாழ்வார்*

**கருத்து :—** எம்பிரான் ஆகிய நீ பிறந்த பிறகு, உருக்கி வைத்த நெய்யும் காய்ச்சி வைத்த பாலும் இறுக வைத்த தயிரும் எடுத்து வைத்த நல்ல வெண்ணெயும் இவற்றில் ஒன்றுகூட நான் பெறவில்லை. எல்லாச் சேட்டைகளையும் நீ செய்கின்றாய் ; என்றாலும் உன்னை ஒன்றும் செய்ய மாட்டேன் ; கோபம் வேண்டாம் அப்பா ; முத்தைப்போல ஒரு சிரிப்புச் சிரித்து மூக்கை உறிஞ்சிக் கொண்டு வந்து பாலைக் குடி வா.

**அரும்சொற்பொருள் :—** வடிதயிர் ; நீர்வடிந்த கெட்டித் தயிர். கதம் : கோபம். முறுவல் : புன்சிரிப்பு.

2

# நாலாயிரப் பிரபந்தம்

## கண்ணன் பின்னாக வந்து முதுகைக் கட்டிக் கொள்கின்றான்.

பொத்த உரலைக்
　　கவிழ்த் து,அதன் மேல்ஏறி,
தித்தித்த பாலும்
　　தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறு
　　ஆர விழுங்கிய
அத்தன்வந்து என்னைப் புறம்புல்குவான் ;
　　ஆழியான் என்னைப் புறம்புல்குவான். கரு

*—பெரியாழ்வார்*

**கருத்து :—** ஓட்டை உரலைக் குப்புறப் போட்டு அதன்மீது ஏறிக்கொண்டு இனித்த பாலையும் சட்டி வெண்ணெயை யும் நிறைய அழகிய வயிறு குளிர உண்ட தலைவன் வந்து என்னை முதுகைக் கட்டிக்கொள்வான் ; சக்கரக் கையவன் என் பின்பக்கமாக வந்து என்னைத் தழுவு வான்.

**அரும்சொற்பொருள் :—** தடா : பாத்திரம். ஆழியான் : சக்கரத்தையுடையவன்; கடலில் துயின்றோன் என்றும் சொல்லலாம். ஆழி : க. சக்கரம்; உ. கடல். புறம் புல்கல் : முதுகைத் தழுவுதல்.

# நாலாயிரப் பிரபந்தம்

## அப்பா! அழாதே.

கானுர் நறுந்துழாய்
கைசெய்த கண்ணியும்
வானுர் செழுஞ்சோலைக்
கற்பகத்தின் வாசிகையும்
தேனுர் மலர்மேல்
திருமங்கை போத்தந்தாள் ;
கோனே! அழேல்! அழேல்! தாலேலோ!
குடந்தைக் கிடந்தானே! தாலேலோ! கள

*— பெரியாழ்வார்*

**கருத்து :—** புனத்திலே உள்ள நல்ல துழாயினுல் கட்டப் பெற்ற தலையில் சூடும் மாலையும் தேவலோகத்தில் உள்ள செழுமையான சோலையில் பொருந்திய கற்பக‌ப்பூ மாலையும் தேன் நிறைந்த கமலப்பூமேல் வீற்றிருந்த திருமகள் உனக்காக அனுப்பியிருக்கிருள் ; தலைவனே! அழாதே, அழாதே; உனக்குத் தாலாட்டு. கும்பகோண நகரத்தில் பள்ளிகொண்ட பெருமாளே! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** கண்ணி : தலையில் அணியும் மாலை. வாசிகை : நெற்றியில் தொங்கவிடும் மாலை. போத்தந்தாள் : கொடுத்தனுப்பினுள். குடந்தை : கும்பகோணம்.

# நாலாயிரப் பிரபந்தம்

## கண்ணனின் அங்க அழகு.

நோக்கி யசோதை
நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து,நீர்
ஆட்டும்இந் நம்பிக்கு
வாக்கும் நயனமும்
வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே!
மொய்குழ லீர்!வந்து காணீரே. கஅ

—*பெரியாழ்வார்*

**கருத்து** :— யசோதைத் தாயானவள், பார்த்துப் பார்த்து, சிவிய மஞ்சளால் நாக்கு வழித்துக் குளிப்பாட்டுகின்ற இந்தக் கண்ணபிரானுக்கு, பேச்சும் கண்ணும் வாயும் பல்லும் மூக்கும் இருந்த அழகைக் காணுங்கள்; வண்டு மொய்க்கின்ற கூந்தலையுடைய பெண்களே! வந்து கண்டு மகிழுங்கள்.

**அருஞ்சொற்பொருள்** :— நுணுக்கிய : சிறிதாக்கிய. நயனம் : கண். முறுவல் : பல்.

# நாலாயிரப் பிரபந்தம்

## பழம் தருகின்றேன், வா!

கண்ணைக் குளிரக் கலந்துஎங்கும் நோக்கிக்
கடிகமழ் பூங்குழ லார்கள்
எண்ணத்துள் என்றும் இருந்து.தித் திக்கும்
பெருமானே! எங்கள் அமுதே!
உண்ணக் கனிகள் தருவன்; கடிப்பொன்றும்
நோவாமே காதுக்கு இடுவன்;
பண்ணைக் கிழியச் சகடம் உதைத்திட்ட
பற்பநா பா! இங்கே வாராய். கசு

—*பெரியாழ்வார்*

**கருத்து :—** கண்குளிர நோக்கிச் சேர்ந்து எங்கும் மணம் வீசும் மலர் அணிந்த கூந்தலையுடைய நங்கைமார் உள்ளத்திலே இடையறுது இருந்து இனிப் பூட்டும் பெருமானே! எங்கள் அமுதமே! உண்ணப் பழங்கள் தருவேன்; காது வலிக்காமல் தோடு அணிவேன்; நிலம் கிழியுமாறு வண்டி வடிவாக வந்த அசுரனை உதைத்துஉருட்டிய கண்ணபிரானே! இங்கே வா.

**அரும்சொற்பொருள் :—** கடி : மணம். கடிப்பு : காதுத் தோடு. பண்ணை : நிலம். சகடம் : வண்டி. பத்மநாபன், திருமால் பெயர்களுள் ஒன்று.

## உ0-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :— இரத்தினங்களை தன்னுள் வைத்துக்கொண்டிருக்கின்ற நீண்ட கடலால் சூழப்பட்ட உலகத்தைச் சுமக்கும் ஆதிசேடனுடைய தலை உச்சியில், பெருமையுடைய பெரிய யானைகள் தம் கழுத்திலே வைத்துக் கொண்ட ஒளி வளர்கின்ற விமானத்திலே, வெண்மையான பிடரிமயிரை உடைய சிங்கம் தாங்கிய அழகான ஆசனத்திலே, அழகிய தங்க மகுடத்தைத் தலையிலே தாங்கி, எங்கள் சிவபெருமானுடன் கொலுவீற்றிருந்த மீனுட்சி என்னும் தேவாமிர்தத்தை, பெண்களுக்கெல்லாம் இராணியை, எம் மாதாவை நன்கு காப்பாயாக ;

கண்ணியாகத் தொடுக்கப்பெற்ற குளிர்ந்த துளசிக் காட்டினின்றும் பெருகி ஓடும் தேன் வெள்ளம் பாய்ந்து சகதியை உண்டாக்க, வயலில் தோன்றிய வழியில் தன் மனையாளாகிய தாமரையாள், ஒப்பற்ற கணவன் கையை அணையாகப்பற்றிக் கடக்க, வளைந்த படம் கொண்ட பாம்புப் பாயாகிய சுருட்டானது, பெரிய தோள்களையும் பிடரியையும் வருத்த, பழைய வேதங்கள் ஓலமிட, பசிய தமிழின் பின்னே நடந்த பச்சைப் பசேல் என்ற மேகம்போன்ற திருமாலே.

**அரும்சொற்பொருள்** :— வலயம் : பூமி. மாசுணம் : பாம்பு. சூட்டு : உச்சி. மோட்டு : பெருமைபெற்ற. மால் : பெரிய. களிறு : யானை. வால் : வெள்ளை. உளை : பிடரிமயிர். மடங்கல் : சிங்கம். பீடிகை : ஆசனம். கலுழி : வெள்ளம். அளறு : சேறு, கழனி : வயல். நடவை : பாதை. பணி : பாம்பு. முடவு : வளைவு. எருத்து : பிடரி.

கணிகண்ணன் என்ற பக்தனுக்காக, "கணிகண்ணன் போகின்ருன்" எனும் தமிழ்ப் பாட்டின் பின்னே, தம்து பாம்புப் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு திருமகள் தொடரப் பெருமாள் சென்ருர் என்பது கதை.

கொண்டல் அம்மனையைக்காக்க என்பது முடிபு.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## காப்புப் பருவம்

மணிகொண்ட நெடுநேமி வலயம்
சுமந்தாற்றும் மாசுணச் சூட்டுமோட்டு
மால்களிறு பிடர்வைத்த வளர்ஒளி
விமானத்து வால்உளை மடங்கல்தாங்கும்

அணிகொண்ட பீடிகையின் அம்பொன்முடி
முடிவைத்துஎம் ஐயனொடு வீற்றிருந்த
அங்கயற் கண்அமுதை மங்கையர்க்கு
அரசியைஎம் அம்மனையை இனிதுகாக்க ;

கணிகொண்ட தண்துழாய்க் காடுஅலைத்து
ஒடுதேங் கலுழிபாய்ந்து அளறுசெய்யக்
கழனிபடு நடவையில் கமலத்து
அணங்கரசுஒர் கையணை முகந்து செல்லப்

பணிகொண்ட முடவுப் படப்பாய்ச்
சுருட்டுப் பணைத்தோள் எருத்துஅலைப்பப்
பழமறைகள் முறைஇடப் பைந்தமிழ்ப்
பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே. உ0

—குமர குருபரர்

## உக-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** குளிப்பாட்டி அரைத்த தங்க நிறமான சந்தனம் பூசி, அள்ளி நெற்றியில் தொட்டுவைத்த திருநீற்றுக்கும் சந்தனக் கோட்டுக்கும் பொருந்துமாறு ஒரு முத்துச் சுட்டி அணிந்து, மாலையை அணிந்த உச்சிக்கொண்டை யும் முடித்து, தலை நகைகளைத் திருந்த அமைத்து, குளிர்ந்த ஒளிவீசும் முத்துத் தொங்கட்டமும் பொற் கொப்பும் காதுக்கு இட்டு, பாராட்டுகின்ற பாண்டிய னின் பெருந்தேவியானவள், தன் திருப்பால் அமுதம் ஊட்டி, ஒப்பற்ற நினது பால்மணம் வீசும் அல்லிமலர் போன்ற வாயிலே கனிந்து ஊற்றெடுக்கின்ற தேனனது, தாயாகிய பாண்டிப்பெருந் தேவியின் பட்டுப்புடவை மடியை நனைப்ப, கொஞ்சி முத்தமிடும் பசியகிளியே! செங்கீரை ஆடி அருள்; பாண்டியனுக்கும் இமவான் என்னும் மலையரசனுக்கும் ஒப்பற்ற மகளே! செங்கீரை ஆடி அருள்.

**அரும்சொற்பொருள் :—** திமிர்ந்து : பூசி. நித்திலம் : முத்து. சுட்டி : நெற்றியில் அணியும் ஒரு நகை. சூழியம் : உச்சி. குதம்பை : காது அணி. பாண்டிப் பெருந்தேவி, மீனாட்சியைப் பெற்ற தாயாகிய காஞ்சனை என்பாள். குமுதம் : அல்லி. தேறல்: தேன்; இங்கு குழந்தையின் வாய்நீர். சீராட்டி : கொஞ்சி. செங்கீரை யாடல், குழந்தை தலை நிமிர்ந்து ஆடல்.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## செங்கீரைப் பருவம்

நீர்ஆட்டி, ஆட்டுபொற் சுண்ணம்
திமிர்ந்து,அள்ளி நெற்றியில்தொட்டு இட்டவெண்
நீற்றினெடு புண்டரக் கீற்றுக்கும்
ஏற்றிட,ஓர் நித்திலச் சுட்டிசாத்தி,

தார்ஆட்டு சூழியக் கொண்டையும்
முடித்துத் தலைப்பணி திருத்தி,முத்தின்
தண்ஒளி ததும்பும் குதம்பையொடு
காதுக்குஓர் தமனியக் கொப்பும் இட்டு,

பாராட்டு பாண்டிப் பெருந்தேவி
திருமுலைப் பால்அமுதம் ஊட்டி,ஒருநின்
பால்நாறு குமுதம் கனிந்துஊறு
தேறல்தன் பட்டாடை மடிநனைப்ப,

சீர்ஆட்டி வைத்துமுத் தாடும்
பசும்கிள்ளை! செங்கீரை ஆடிஅருளே!
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும்
ஒருசெல்வி! செங்கீரை ஆடிஅருளே! உக

—குமர குருபரர்

## உஉ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :**—பாண்டியனின் தமிழோடு கூடப்பிறந்த தென்றற் காற்று வீச, அதனாலே தீயைப்போலச் சிவந்த தளிர் விடும் இனிய மாமரத்தின் நிழலிலே, உறங்கும் சிவந்த கண்களையும் பெரிய வாயையும் உடைய இளமையான கன்று போட்ட எருமையானது, இன்னம் பசியபுல்லைக் கடிக்க முடியாத சிறு கன்றுக்குட்டியை நினைத்து, மடியினின்றும் சொரிகின்ற பால் அருவியாகப் பெருகி ஓட, அது பாய்ந்த அலைவீசும் இனிய நீர்த் தடாகத்திலே, பொன் போன்ற அழகிய தாமரையின் பசிய இதழ்களிலே பொருந்திய பொன்நிறமான மகரந்தப்பொடிகளை அப்பிக்கொண்டு, நிலவுக் கூட்டத்தை வீசுகின்ற பாற்கடலால் பெறப்பெற்ற திருமகளைப்போல, தொடுக்கப்பட்ட தோலைப்போன்ற காலையும் அழகான உச்சிக் கொண்டையையும் கொண்ட அன்னப்பறவை விளங்குகின்ற, தமிழ் முழங்கும் மதுரை நகர்க்கு அரசே! உனக்குத் தாலாட்டு; கருணையே வடிவான மீனாட்சியமுதமே! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :**— சிறுகால் : தென்றல் காற்று. புனிற்று எருமை : கன்றுபோட்டுச் சில நாளேயான எருமை. கயவாய் : பெரியவாய். உவட்டெறிய : பெருக்கெடுத்தோட. தோடு : இதழ். தாது : மகரந்தப்பொடி. பொறையுயிர்த்த : பெற்ற. பொலன் : அழகு.

எருமை சொரிந்த பால் பொய்கையை நிறைத்தலால் பொய்கை பாற்கடலாயது; அப்பொய்கையில் மலர்ந்த தாமரைப்பூவின் பொடியைப் பூசிக்கொண்டு அங்கு உறைந்த அன்னப்பறவை திருப்பாற்கடலில் திகழும் திருமகளை நிகர்த்தது என்பது கற்பனை.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## தாலப் பருவம்

தென்னன் தமிழின் உடன்பிறந்த
சிறுகால் அரும்பத் தீஅரும்பும்
தேமா நிழற்கண் துஞ்சும்இளம்
செங்கட் கயவாய்ப் புனிற்றுஎருமை,

இன்னம் பசும்புல் கறிக்கல்லா
இளங்கன்று உள்ளி, மடித்தலம் நின்று
இழிபால் அருவி உவட்டெறிய,
எறியும் திரைத்தீம் புனல்பொய்கைப்

பொன்அம் கமலப் பசுந்தோட்டுப்
பொன்தாது ஆடிக் கற்றைநிலாப்
பொழியும் தரங்கம் பொறைஉயிர்த்த
பொன்போல், தொடுதோல் அடிப்பொலன்சூட்டு

அன்னம் பொலியும், தமிழ்மதுரைக்கு
அரசே! தாலோ! தாலேலோ!
அருள்சூல் கொண்ட அங்கயற்கண்
அமுதே! தாலோ! தாலேலோ! உஉ

—குமர குருபரர்

## உங-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :**—கெண்டைமீனை வருத்துகின்ற கத்தியனைய கண் ஆகிய கருங்கடலானது, மடையின் கடைவரை திறந்து, கருணை ஊற்று அமுதமாகிய தெள்ளிய அலைகளை வாரிவீச, வெள்ளிய அலைகடல் நெருப்புற்று எரிந்து வற்ற, வேல் எடுத்த தெய்வக் குழந்தையாகிய முருகனை, செங்கோல் ஓச்சிய நீ, உன் கணைக்காலிலே வைத்துக் குளிப்பாட்டி, உச்சிக்கொண்டைக்கு நெய் தடவி, திருநீற்றுக் கோடும் தீட்டி, வளர்கின்ற கொங்கையில் அணைத்து, சங்கினுல் வார்க்கும் பாலை, பிள்ளையை ஆட்டி வாயின் உதடுகளை நெரித்து ஊட்டி, உடம்பில் பசிய சந்தனமும் பூசி, பசுமைத் தங்கமான தொடையிலே உறங்கச்செய்து, சிறிய உயர்ந்த கற்கள் பதிக்கப் பெற்ற தொட்டிலிலே ஏற்றி, தாலாட்டுப்பாடி, தொட்டில் ஆட்டும் நின்தாமரைக் கைகளைக் குவித்து, மீனுட்சித் தாயே! சப்பாணி கொட்டி யருள்வாயாக;

தமிழோடு கூடப்பிறந்து பழமையான மதுரை நகரில் வளர்ந்த கொடியே! சப்பாணி கொட்டி யருளுக.

**அரும்சொற்பொருள் :**— முச்சி : கொண்டை. குறங்கு : தொடை. தெய்வக் குழந்தை என்றது குமரக்கடவுளை. முருகனே உக்கிர குமார பாண்டியனுகப் பிறந்து கடல் வற்ற வேல் விட்டான் என்று திருவிளையாடல் கூறும்.

# மீனுட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## சப்பாணிப் பருவம்

சேல்ஆட்டு வாள்கண் கருங்கடல்
கடைமடை திறந்துஅமுதம் ஊற்றுகருணைத்
தெண்திரை கொழித்துஎறிய, வெண்திரை
நெருப்பு ஊட்டு தெய்வக் குழந்தையை,செங்

கோல்ஆட்டு நின்சிறு கணைக்கால்
கிடத்திக் குளிப்பாட்டி, உச்சிமுச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி, வெண்காப்பும்
இட்டு,வளர் கொங்கையில், சங்குவார்க்கும்

பால்,ஆட்டி வாய்இதழ் நெரித்துஊட்டி,
உடலில் பசும்சுண்ண மும்திமிர்ந்து,
பைம்பொன் குறங்கினில் கண்வளர்த்
திச்சிறிய பருஉமணித் தொட்டில்ஏற்றித்

தாலாட்டி, ஆட்டுகைத் தாமரை
முகிழ்த்துஅம்மை! சப்பாணி கொட்டிஅருளே!
தமிழொடு பிறந்துபழ மதுரையில்
வளர்ந்தகொடி! சப்பாணி கொட்டிஅருளே! உந

—குமர குருபரர்

## உச-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :— கால எல்லேக்கும் கற்பனேக்கும் அப்பாற்பட்ட செல்வக் களஞ்சியத்திலே, பழமையான பாடல்வல்ல கலேப்பெரும் செல்வர்களால் தேடிச் சேர்க்கப்பெற்ற கடவுள் மணியே!

உயிராகிய பாத்தியிலே உணர்வாகிய நீரைப்பாய்ச்சி வளர்க்கின்றவருக்கு ஒளியாகப்பூத்து, கருணேயாகப் பழுத்த மலர்க் கற்பகமே!

எழுதாத சொற்களாகிய பசுங்குதலேச் சொற்களேக் குழறிக் கொட்டுகின்ற சோலேவாழ் கிளியே!

உலகின் உயிர்கட்கெல்லாம் துணேயாக அமைந்த தோன்றுத் துணேயாகிய சிவபெருமானுக்கு ஒப்பற்ற துணேயாக இணேந்து, துவாதசாந்தமாகிய பெரிய வெளியிலே உயர்நிலேயையும் கடந்த மேலான நாத மூலத்தலமாகிய மதுரையில் முளேத்த முதலே! முத்தம் தருவாயாக;

மூன்று கண்பெற்ற கடவுளுக்கு விருந்திட்ட மும்முலே யுடையாய்! முத்தம் தருக!

**அரும்சொற்பொருள்** :— கருவூலம் : செல்வக்களஞ்சியம். கலேமாச்செல்வர்: கலேவல்ல பேர் அறிஞர். ஆலவாலம்: பாத்தி. மழலே : குழறியபேச்சு. குதலே : வரிவடி வில்லாச் சொல். துவாதசாந்தம் : உச்சிக்குப் பன்னிரண்டு அங்குலத்திற்கு மேல் உள்ள இடம். துரியம் : உயர்நிலே.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## முத்தப் பருவம்

காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடல்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே! உயிர்ஆல

வாலத்து உணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க்கு ஒளிபூத்து அருள்பழுத்த
மலர்க்கற் பகமே! எழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே! உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்குஓர் துணையாகித்
துவாதசாந்தப் பெருவெளியில்
துரியம் கடந்த பரநாத

மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே! முத்தம் தருகவே!
முக்கட் சுடர்க்கு விருந்திடும்மும்
முலையாய்! முத்தம் தருகவே! ௨௪

—குமர குருபரர்

## உரு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** கட்டப்பட்ட தெய்வத் தன்மை வாய்ந்த பழைய பாமாலையின் பயனே !

தேனிற் கிடந்து முதிர்ந்த காதல் கனிந்த இனிய தமிழில் இன்பம் கொட்டுகின்ற நல்ல சுவையே !

ஆணவம் என்கின்ற கிழங்கைத் தோண்டி எடுத்தெறியும் தொண்டரின் உள்ளமாகிய கோயிலிலே ஏற்றிவைக்கும் விளக்கே !

ஓங்கிய சிகரத்தையுடைய இமயமலையில் ஆடித்திரிகின்ற இளமையான மென்மை வாய்ந்தபெண் யானையே!

அலைவீசும் கடல்சூழ்ந்த உலகத்துக்கு அப்பாற்பட்டவனுகிய சிவபெருமான், தன் திருவுள்ளத்திலே அழகு ஒழுகுமாறு எழுதிவைத்துப் பார்த்துக்கொண்டிருக்கும் உயிருள்ள சித்திரப்பாவையே! வண்டுகள் வாய்வைத்து உண்ணும் கூந்தல் காட்டைச் சுமக்கும் இளநங்கைக் கொடியே ! வருவாயாக ;

மலயத்துவச பாண்டியன் பெற்றெடுத்த பெரிய வாழ்வே வருக ; வருக.

**அரும்சொற்பொருள் :—** தொடை : மாலை. நறை : தேன். துறை : (காதல்) வழி. நறும் : நல்ல. அகந்தை : ஆணவம். அகழ்ந்து : தோண்டி. பொருப்பு : மலை. பிடி : பெண் யானை. தரங்கம் : அலை. மதுகரம் : வண்டு. குழற்காடு : கூந்தல் சுமை.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
தொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகும்நறும்
சுவையே! அகந்தைக் கிழங்கை,அகழ்ந்து

எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே! வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே! எறிதரங்கம்

உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திருஉள் ளத்தில்அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிர்ஓ வியமே! மதுகரம்வாய்

மடுக்கும் குழற்காடு ஏந்தும்இள
வஞ்சிக் கொடியே! வருகவே!
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே! வருக! வருகவே! ௨௫

—குமர குருபரர்

## உசு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து**:— மிகுந்த தேனைக் கொட்டுகின்ற மணமுள்ள குழலையுடைய பெண் யானையே வருக!

நிறைந்த அறிவுக் களஞ்சியமே வருக!

குழவித் திங்கள் சூடிய சடைமுடியுடைய சிவபெருமானின் மூன்று கண்ணாகிய சுடருக்கு இட அமைந்த நல் விருந்தே வருக!

பிரமன் திருமால் சிவன் என்ற மூன்று முதல்வர்கட்கும் விதையே வருக!

முந்தை வேதத்தின் குருத்தே வருக!

கருணை கனிந்த கிளையே வருக!

திருவிழிக் கோணத்தில் ஊற்றெடுத்த அருட்பெருங் கடலில் திளைத்தாடுவார் பிறவிப் பெரு நோய்தீர்க்கும் ஒப்பற்ற மருந்தே வருக!

பசிய எழுதாச்சொல் மிழற்றும் கிளியே வருகவே!

மலயத்துவச மாறன் பெற்றெடுத்த பெரிய வாழ்வே வருக! வருக!

**அரும்சொற்பொருள்** :— நறை : மணம். மௌலி : முடி. குருத்து என்பது எதுகை நோக்கிக் குருந்து ஆயது.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தல்
பிடியே! வருக! முழுஞானப்
பெருக்கே! வருக! பிறைமௌலிப்
பெம்மான் முக்கண் சுடர்க்குஇடுநல்

விருந்தே! வருக! மும்முதற்கும்
வித்தே! வருக! வித்துஇன்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே! வருக! பழமறையின்

குருந்தே! வருக! அருள்பழுத்த
கொம்பே! வருக! திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்குஓர்

மருந்தே! வருக! பசுங்குதலை
மழலைக் கிளியே! வருகவே!
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே! வருக! வருகவே! ௨௬

—குமர குருபரர்

## ௨எ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :**—கணக்கில்லாத பல உலகமாகிய பெரிய அடுக்குக்களைத் தாண்டி இவளுடைய பெரிய புகழாகிய நீண்ட நிலவொளி எங்கும் நிறைந்திருப்பது ;

அவ் இடத்து அந்நிலவிலே மெதுவாக நீ எள் அத்தனை முகந்து வெண்மையான நிலவைப் பொழியப் பெற்றனை;

இம் மீனுட்சி விழிக் கடையிலே அடக்கிப் பொழிந்த அருட்கடலில் குடைந்தாடும் பெருமையால் குளிர்ந்த கருணை சொரியவும் பெற்ருய் ;

தரையில் ஒள்ளிய பசியபயிரை நீ வளர்ப்பது, உன் னிடத்திலே அம்மை வைத்த ஆற்றலினுலேயே ;

வேருெரு சுதந்தரம் உனக்கு இல்லை. கலைமதிக் கடவுளாகிய உனக்கு இது தெரியும் ;

பெருமை மிக்க அழகிய மதயானையையுடைய அரசர் பெருமகளாகிய அங்கயற் கண்ணியுடன், சந்திரா ! விளையாட வா ;

மாற்றுயர்ந்த தங்கவில் தாங்கிய சிவனுரை அணை கின்ற மரகத வல்லியோடுகூட விளையாடத் திங்களஞ் செல்வா ! வருக.

**அரும்சொற்பொருள் :**— புவனம் : உலகம். தட்டு : அடுக்கு. மடுத்து : அடக்கி. வெள்ளம் : கடல். அம்புலி : சந்திரன். மாணிக்கம் : இரத்தினம் ; ஈண்டு, பச்சை. அம்புலிப் பருவம், சந்திரனைக் குழந்தையுடன் விளையாடக் கூப்பிடுதல்.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## அம்புலிப் பருவம்

எண்ணில்பல புவனப் பெருந்தட்டை
ஊடுருவி இவள்பெரும்பு கழ்நெடுநிலா,
எங்கணும் நிறைந்திடுவது; அங்குஅதனின்
மெள்ளநீ எள்ளளவு மொண்டுகொண்டு

வெண்நிலவு பொழிவது கிடைத்தனை;
மடுத்துஇவள் விழிக்கடை கொழித்தகருணை
வெள்ளம் திளைத்தாடு பெற்றியால்
தண்அளி விளைப்பதும்பெற் றனைகொலாம்;

மண்ணில்ஒண் பைங்கூழ் வளர்ப்பதுன்
இடத்துஅம்மை வைத்திடும் சத்தியேகாண்;
மற்றுஒரு சுதந்தரம் நினக்கென
இலை;கலை மதிக்கடவுள்நீ உணருவாய்!

அண்ணல்அங் களியானை அரசர்கோ
மகளுடன் அம்புலீ! ஆடவாவே;
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க
வல்லியுடன் அம்புலீ! ஆடவாவே. ௨௭

—குமர குருபரர்

## உஅ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :—முத்துக்கள் பதிக்கப் பெற்ற அம்மனையாடும் காய்களிலே கைம்மலராகிய தாமரையின் வாசனை வீச, அதிலே மொய்த்த கூந்தலிலுள்ள வண்டுகள் நின் மை தீட்டிய கண்களாகிய வண்டுகளுடன் கலந்து தடுமாற, குவியலான பல மணிகளால் செய்யப்பெற்ற அம்மனைக் கருவிகள் குயிலைப்போலக் கூவிய நின் குழல்போன்ற இசைக்கு உருகிப் பனிபோல் தொங்கும் சிறு திவலையை வீழ்த்த, பவளத்தால் இழைக்கப்பட்ட அம்மனைக் காய்கள் நின் விரல்களாகிய பவளக் கொழுந்திலுள்ள ஒளியைக் களவாடப் போவதும் வருவதுமாய்த் திரிய, தலைவனுடைய உள்ளத்திலே வரையப்பட்ட உயிர்ச் சித்திரமே! அம்மனை ஆடுவாயாக!

எழில் துளிர்த்த மண அழகி! அம்மனை ஆடுக.

**அரும்சொற்பொருள்** :— முளரி : தாமரை. முயங்குதல் : கலத்தல். வித்துருமம் : பவளம்.

அம்மானை ஆடுதல், மகளிர் காய்களை எறிந்து கையாற் பிடித்து விளையாடுதல். அம்மனைக் காய்களில் சிலவற்றில் முத்தும் வேறு சிலவற்றில் பவளமும் மற்றும் சிலவற்றில் வேறு இரத்தினங்களும் பதிக்கப்பெற்றிருக்கின்றன.

# மீனுட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## அம்மானைப் பருவம்

முத்தம்அ ழுத்திய அம்மனை
கைம்மலர் முளரிம ணம்கமழ,
மொய்குழல் வண்டுநின் மைவிழி
வண்டின் முயங்கிம யங்கியிட,

கோத்தும ணித்திர ளிற்செயும்
அம்மனை குயிலின்மி ழற்றியநின்
குழலின்இ சைக்குரு கிப்பனி
தூங்கு குறுந்துளி சிந்தியிட,

வித்துரு மத்தில்இ ழைத்தவும்
நின்கை விரல்பவ ளத்தளிரின்
விளைதரும் ஒள்ஒளி திருடப்
போவதும் மீள்வதும் ஆய்த்திரிய

அத்தன்ம னத்துஎழு தியஉயிர்
ஓவியம்! ஆடுக அம்மனையே;
அழகுத ழைந்தகல் யாண
சவுந்தரி! ஆடுக அம்மனையே. ௨அ

—குமர குருபரர்

## உகூ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** தாவுகின்ற அலைகளையுடைய குளிர் நீர் வைகையின் வண்டல்படி மண்ணைக் கூடையைக் கட்டி வாரிச் சுமந்தவராகிய சோமசுந்தரக்கடவுளானவர், மீனுட்சியம்மையே! நினது மணிகள் தாங்கிய பொன் குடங்களாகிய இரு கொங்கைகளிலும் பூசிக் கரைத்து ஊற்றப்படும் வாசனைக் குங்குமச் சேறு, மேடாகக் கிடக்கும் மணம் நிறைந்த மலர்த் துறையின் மண் கிடைக்கப் பெறுவாராஞல், அடிக்கடி ஒரு வாணிச்சி பிட்டு இடவும் அடித்து ஒரு பாண்டியன் வேலை வாங்கவும் வேண்டும் என நினைப்பார்.

அவ் இடத்தில் நீ நிறைந்த புனித நீர் ஆடப்பெறுவாயாஞல் அந்தக் கங்கையானவள் இறைவன் சடையின் குடியிருப்பையும் ஒதுக்கி விடுவாள்.

பொன் சிகரத்தைப்பெற்ற மேருமலையிலே மீனக் கொடியை உயர்த்தியவளே! புது நீரிலே குளித்தருளுக;

தாம்பரபருணித் துறைக்குத் தலைவஞகிய பாண்டியன் மகளே! புதுப் புனல் ஆடி அருள்வாயாக.

**அரும்சொற்பொருள் :—** மறித்தல் : தாவுதல். துணை : இரண்டு. வெறி : மணம். எக்கர் : மணல் மேடு. குறிக்கும் : எண்ணும். கோடீரம் : சடை. போலும், அசை. பொருநை : தாம்பரபருணி ஆறு.

அம்பிகையின் குங்குமச் சேற்று வண்டலைச் சுமக்க விரும்பி அடிக்கடி கடவுள் மண் சுமக்கவும் பிரம்படி படவும் பிட்டுப் பெறவும் முன்வருவா ரென்பதும் அதஞல் சக்களத்தியாகிய கங்கை, தன் கணவன் சடையை விட்டுச் சென்று விடுவாள் என்பதும் இப் பாடலால் பெறப்படும்.

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

## நீராடல் பருவம்

மறிக்கும் திரைத்தண் புனல்வைகை
வண்டல் இடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோர், அம்மை! துணை
மணிப்பொற் குடத்தில் கரைத்துஊற்றும்

வெறிக்குங் குமச்சேறு எக்கர்இடும்
விரைப்பூந் துறைமண் பெறின்,ஒருத்தி
வெண்பிட்டு இடவும் அடித்துஒருவன்
வேலை கொளவும் வேண்டும்எனக்

குறிக்கும்; இடத்தில் தடந்தூநீர்
குடையப் பெறின்அக் கங்கைதிருக்
கோடீ ரத்துக் குடிஇருப்பும்
கூடா போலும்; பொலன்குவட்டுப்

பொறிக்கும் சுறவக் கொடிஉயர்த்தாய்!
புதுநீர் ஆடி அருளுகவே;
பொருநைத் துறைவன் பொற்பாவாய்!
புதுநீர் ஆடி அருளுகவே. உகூ

—குமர குருபரர்

## ௲0-ஆவது பாட்டின் பொருள்.

**கருத்து** :— செந்தாமரை அணங்கு வீற்றிருக்கின்ற பசுமை யான கலவை பூசிய தோள் மலையையுடைய திருமால் வணங்கவும், வான வெளி உச்சியிலே உள்ள சிவபிரான் துதிக்கவும், பொதிகை மலையிலே வாழும் சிறந்த பெரிய முனிவனாகிய அகத்தியனுக்குத் தமிழ் கற்பித்த, குருவுக்குக் குருவை, கத்துகின்ற கடலுக்கு மேற்கே கோயில்கொண்டு வீற்றிருக்கின்ற செந்தூர் குமரக் கடவுளைக் காப்பாயாக ;

தேன் பிலிற்றும் சிறந்த அழகிய செழுமையான மொட்டுக்கள்கொண்ட செந்தாமரைப் பூவில் குடி கொண்ட தேவாகிய திருமகளைப் படைத்து, எல்லா வற்றையும் படைக்கும் முதல்வனாகிய பிரமனையும் உண்டாக்கி, படைக்கும் உயிர்கட்கெல்லாம் பொருந்துமாறு அளவுக்கு அளவாகி எல்லாம் செழிக்கும்படி நினைத்துக் காப்பதற்கே ஒருவனாக, சங்கு சக்கரம் ஏந்தி நிற்கும் கடவுளே.

**அரும்சொற்பொருள்** :— புயம் : தோள். பூதரம் : மலை. புருகூதன் : தேவன் ; இங்குத் திருமால். புத்தேள் : தேவன் ; ஈண்டுச் சிவன். தமிழ் முனிவனாகிய அகத்தியனுக்குத் தமிழ் சொன்னான் முருகன் என்பது கதை. திருச்செந்தூர் கடலுக்கு மேற்கே இருக்கின்றது. திருமால் வணங்கும் தகுதி வாய்ந்தவன் கந்தக் கடவுள் என்று கருதினாலும் அவனைக் குழந்தையாகப் பாவித்துப் பாடும் பிள்ளைத் தமிழாதலின் திருமாலுக்குக் காப்புக் கூறுவது மரபாயிற்று.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## காப்புப் பருவம்

பூமாது இருக்கும் பசுங்களபப்
புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப்
புத்தேள் பரவப் பொதிகைமலைக்

கோமா முனிக்குத் தமிழ்உரைத்த
குருதே சிகனைக் குரைகடற்குக்
குடக்கே குடிகொண்டு இருந்தசெந்தில்
குமரப் பெருமான் தனைக்காக்க;

தேமா மலர்ப்பொற் செழும்பொகுட்டுச்
செந்தா மரையில் வீற்றிருக்கும்
தேவைப் படைத்துப் படைக்குமுதல்
சேரப் படைத்துப் படைக்கும்உயிர்

ஆமாறு அளவுக்கு அளவாகி
அனைத்தும் தழைக்கும் படிகருதி
அளிக்கும் படிக்குத் தனியேசங்கு
ஆழி படைத்த பெருமானே. ௩௦

—பகழிக் கூத்தர்

## ருக-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :**—கொடிய ஆலகால நஞ்சு கொட்டுகின்ற பற்களையுடைய பெரிய வாயைத் திறந்து பாம்புகக்கிய பேரொளியை உடைய இரத்தினக் கூட்டம் ஊழிக் காலத்து இருட்டை உண்ணவும், மூங்கில் முத்துக் களை உதிர்த்துக் கொட்டவும், சிவபிரான் முடியிற் சூடிய கங்கையாற்றின் பெருக்குப் போன்ற குட்டை யான பிளந்த பாதத்தைக் கொண்ட எருமையின் பருத்த மடிக் காம்புகள் திறந்து கொட்டும் பாலானது சூரியனின் வெப்பம்பட மாறுபட்டு ஒளிகெடாமல் வெள்ளித் தகட்டைப்போலச் சுடர்விட, மலைக் குற மக்கள் அதனைப் பார்த்தெடுத்து வளம்கொண்ட தினைப் பயிருக்கு உரம் இடவும் அமைந்த மலைச் சாரலிலே, கரியநிறம் வாய்ந்த குறப்பெண்களின் உள்ளத்தை ஊசலாட்டி, செங்காவி போன்ற அவர் கள் விழிகளைக் குடிக்கின்ற பன்னிரண்டு கைகள் பெற்ற மேகமே ! செங்கீரை ஆடியருள் ;

திரைவீசுகின்ற திருச்செந்தூரை விரும்பிக் குடி கொண்ட வடிவேலா ! தலை நிமிர்ந்து ஆடிஅருள்க.

**அரும்சொற்பொருள் :**—காளகூடம் : ஆலகாலம். விடம் : நஞ்சு. மாசுணம் : பாம்பு. வேய் : மூங்கில். கங்காளர் : எலும்பணிந்த சிவன். கங்காளம் : எலும்பு. கடுப்ப : ஒப்ப. குறும் : குட்டை. கவை : பிளவு. கவரி : எருமை. இரசதம் : வெள்ளி. அலைவாய் : செந்தூர்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## செங்கீரைப் பருவம்

வெங்காள கூடவிடம் ஒழுகுபல்
பகுவாய் விரித்துமா சுணம்உமிழ்ந்த
வெங்கதிர் மணிக்கற்றை ஊழிஇரு
ளைப்பருக, வேய்முத்துஉ திர்ந்துசொரிய,

கங்காளர் முடிவைத்த கங்கா
நதிக்கதிர் கடுப்பக்குறும் கவைக்கால்
கவரியின் பருமுலைக் கண்திறந்து
ஒழுகுபால் கதிர்வெயில் படமுரிந்து

மங்காமல் இரசதத் தகடுஎனச்
சுடர்விட மலைக்குறவர் கண்டெடுத்து
வண்தினைக்கு எருவிடும் சாரலில்
கரியகுற மகளிர்உளம் ஊசல்ஆடச்

செங்காவி விழிபருகு பன்னிருகை
மேகமே! செங்கீரை ஆடியருளே;
திரைஎறியும் அலைவாய் உகந்தவடி
வேலனே! செங்கீரை ஆடியருளே. நக

—பகழிக் கூத்தர்

## நஉ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :-** குளிர்ந்த தேன் ஒழுகப் பேசும் பெண்களது மாலையைக் குடைந்து, ஒலி செய்யும் மகிழ்ச்சியுடைய வண்டுகள் அடைகாக்க, சுருண்டு, இருண்டு, வளர்ந்து, அடர்ந்திருக்கின்ற கூந்தல் சுமையைத் தாங்க முடியாது வாடிப் போனதும் அன்றி, குரும்பையை ஒத்த சந்தனம் அளைந்த கொங்கைகளைச் சுமந்து கொடிபோன்ற இடை இருக்க முடியாது இடத்தை விட்டுக் குடிபோக, காதணியில் தாவிய கண்மீனைக் கண்டு பயந்து கயல் மீன் தடுமாற, பொன் ஒளி பரவிய மாடங்களைப் பெற்று வானைத் தொட்டுநின்ற கோபுரத்தை மேரு மலை எனக் கருதி, சூரியன் வலிய தேர் தடுமாற்றத்தையடையும் திருச் செந்தூர் மேவிய செல்வா ? உனக்குத் தாலாட்டு, தாலாட்டு ; தெய்வயானையை மணஞ்செய்துகொண்ட சிறுவனே ! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** தாமம் : மாலை. கொழுதி : குடைந்து. தமரம் : ஒலி. குரும்பை : தென்னை, அல்லது பனையின் இளங்காய். மருங்குல் : இடை. குழை : காது அணி. வெருவி : பயந்து. மறுகுதல் : தடுமாறுதல். கனகம் : தங்கம்: ககனம் : ஆகாயம். வடவெற்பு : மேருமலை. தெய்வக்களிறு : தெய்வ யானை.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## தாலப் பருவம்

தண்தேன் ஒழுகும் மொழிமடவார்
தாமம் கொழுதிச் சுருண்டுஇருண்டு
தமரக் களிவண்டு அடைகிடந்து
தழைத்து நெறித்த குழற்பாரம்

கொண்டே மெலிந்தது அல்லாது,
குரும்பைக் களப முலைசுமந்து
கொடிபோல் மருங்குல் குடிவாங்க,
குழையில் குதித்த விழிக்கயலைக்

கண்டே வெருவிக் கயல்மறுக,
கனக வெயில்மா ளிகைஉடுத்துக்
ககனம் தடவும் கோபுரத்தைக்
கருதி வடவெற்பு எனக்கதிரோன்

திண்தேர் மறுகும் திருச்செந்தூர்ச்
செல்வா! தாலோ, தாலேலோ;
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா! தாலோ, தாலேலோ. ௩௨

— பகழிக் கூத்தர்

## ௩௩-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :**—முழங்குகின்ற அலைகளால் தூக்கி எறியப்பட்ட வலம்புரிச் சங்குகள், சூலின் முதிர்ச்சியால் வருந்தி கடல்கரையிலே தவழ்ந்து சென்று அங்குள்ள வெண் மணலிலே கக்கிய முத்துக்கு விலையுண்டு ;

தாவும் மதம்பாய் துவாரத்தையுடைய பரந்த பெரிய யானையின் பிறைபோல் வளைந்த தந்தத்தில் விளை கின்ற முத்துக்கு விலையுண்டு ;

விளைந்து கழுத்து வளைந்த, நெல் மணிகளைக் கொத்துக் கொத்தாகச் சுமந்திருக்கின்ற பசுமையான நெல்லிலிருந்து பிறக்கும் குளிர்ந்த முத்துக்கு விலை யுண்டு ;

மேகம் தரும் முத்துக்கும் விலை சொல்லமுடியும் ;

உன் கனிந்த வாய்முத்தத்தை விலை மதிக்கவே முடியாது ;

முருகா ! முத்தம் தா ;

முத்துக்களைக் கொழிக்கின்ற கடல் சூழ்ந்த திருச் செந்தூர் மேவிய முதல்வனே ! முத்தம் தருவாயாக.

**அரும்சொற்பொருள் :**— வால் : வெண்மை. உகம் : மணல். கரடம் : மதம்பாய் சுவடு. விகடம் : பரப்பு. தடம் : பெரிது. தந்தி : யானை. மருப்பு : தந்தம். சாலி : நெல். கொண்டல் : மேகம். மணி, தரளம், முத்து, நித்திலம், முத்தம் என்பன ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## முத்தப் பருவம்

கத்தும் தரங்கம் எடுத்துஎறியக்
கடும்சூல் உழந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வால்உகத்தில்
கான்ற மணிக்கு விலைஉண்டு;

தத்தும் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தாளம் தனக்கு விலைஉண்டு;
தழைத்துக் கமுத்து வளைந்தமணிக்

கொத்தும் சுமந்த பசும்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலைஉண்டு;
கொண்டல் தருநித் திலம்தனக்குக்
கூறும் தரம்உண்டு; உன்கனிவாய்

முத்தம் தனக்கு விலையில்லை;
முருகா! முத்தம் தருகவே;
முத்தம் சொரியும் கடல்அலைவாய்
முதல்வா! முத்தம் தருகவே. ௫௫

—பகழிக் கூத்தர்

## ௨௪-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :—தேடுதற்கு அருமையான இரத்தினங்கள் வைத்து இழைக்கப்பெற்ற அரைஞாண் போடுகின்றேன், வா ;

விரலுக்கு மோதிரம் போடவேண்டும், வா ;

நெற்றிக்குப் பொட்டு வைக்க வேண்டாமா, ஓடி வா ;

தெருவில் விளையாட வா ;

மடியில் எடுத்து அணைக்க வேண்டும், வருவாயாக ;

புதிய பன்னீரால் குளிப்பாட்டுகிறேன், வந்துவிடு ;

நிமிர்ந்த முலைப்பால் குடிக்க வா ;

முத்தம் தர வருக ;

உடலில் ஒட்டிய புழுதியைத் துடைக்கின்றேன், வா ;

ஒரே ஒரு பேச்சுச் சொல்ல வா ;

தளர்நடை தோன்ற வருக ;

ஒளி விடுகின்ற மணிகள் அழுத்திய மாளிகைகள் நெருங்கிய திருச்செந்தூர் குடிகொண்ட வடிவேல் தாங்கிய முருகா ! வா ;

வளர்கின்ற களபம் அணிந்த குரும்பை போன்ற கொங்கையையுடைய வள்ளி நாயகா வா, வா.

**அரும்சொற்பொருள்** :—அரைஞாண் : இடுப்புக் கயிறு. ஆழி : மோதிரம். திலதம் : பொட்டு. நுதல் : நெற்றி. மறுகு : தெரு. நெறித்த : நிமிர்ந்த. வடி : கூர்மையான.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

தேட அரிய மணிஅரைஞாண்
சேர்க்க வருக; விரற்குஆழி
செறிக்க வருக; திலதம்நுதல்
தீட்ட வருக; மறுகில்விளை

யாட வருக; மடியில்எடுத்து
அணைக்க வருக; புதுப்பனிநீர்
ஆட்ட வருக; நெறித்தமுலை
அமுதம் பருக வருக;முத்தம்

சூட வருக; உடல்புழுதி
துடைக்க வருக; ஒருமாற்றம்
சொல்ல வருக; தள்ளிநடை
தோன்ற வருக; சோதிமணி

மாடம் நெருங்கும் திருச்செந்தூர்
வடிவேல் முருகா! வருகவே;
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா! வருகவே. ௩௪

—பகழிக் கூத்தர்

## ௫௬-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :—இறுகக்கட்டும் அரைஞாணை இனி அணிய மாட்டேன் ; மீன் வடிவமாகச் செய்யப்பட்ட குண்டலத்தை எடுத்துக் காதிலே போடமாட்டேன் ;

இனிமேல் உன் முகத்துக்குப் பொருத்தமாக ஒப்பற்ற சிறு பொட்டை வைக்கமாட்டேன் ;

திருக்கண் மலர்க்கு மை பூச மாட்டேன் ;

சிவந்த பொன் தாமரை போன்ற சிறிய பாதங்களில் பாதசரத்தை அழகாக அணிய மாட்டேன் ;

நிமிர்ந்து விம்மி கட்டு மீறிய முலையின் பாலை இனிமையாகத் தர மாட்டேன் ;

உன் முகத்தைப் பார்த்துப் பேசவே மாட்டேன் ; தெரியுமா !

முருகா ! வந்துவிடு ; சிவமத முதல்வனே ! வந்துவிடு ;

திரையைத் தள்ளிக் குதிக்கின்ற திருச் செந்தூர்க் கடற்கரை கோயில் கொண்ட மழலை மிழற்றும் சிறு பிள்ளாய் வா ;

வளர்கின்ற சந்தனக் குழம்பு பூசிய குரும்பைக் கொங்கை வள்ளிக்கு வாய்த்தவனே ! வா, வா.

**அரும்சொற்பொருள் :**— இலங்கும் : விளங்கும். மகரம் : மீன். குழை : காது. விம்முதல் : பருத்தல். முறுகுதல் : கட்டு மீறுதல்.

சென்ற பாட்டில் எல்லாம் அணிவதாகச் சொன்ன, தாய், பிள்ளை வாராமையினலே இனி நீ வாராவிட்டால் ஒன்றும் செய்யமாட்டேன், வந்துவிடு என்று கண்டிப்பாகச் சொல்லுகிருள்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

இறுகும் அரைஞாண் இனிப்பூட்டேன்;
    இலங்கும் மகர குண்டலத்தை
எடுத்துக் குழையின் மீதுஅணியேன்;
    இனிஉன் முகத்துக்கு ஏற்கஒரு

சிறுகும் திலதம் தனைத்திட்டேன்;
    திருக்கண் மலர்க்கு மைஎழுதேன்;
செம்பொற் கமலச் சிறடிக்குச்
    சிலம்பு திருத்தேன்; நெறித்துவிம்மி

முறுகும் முலைப்பால் இனிதுஊட்டேன்;
    முகம்பார்த்து இருந்து மொழிபகரேன்;
முருகா! வருக; சிவசமய
    முதல்வா! வருக; திரைகொழித்து

மறுகும் அலைவாய்க் கரைசேர்ந்த
    மழலைச் சிறுவா! வருகவே;
வளரும் களபக் குரும்பைமுலை
    வள்ளி கணவா! வருகவே. ௩௫

—பகழிக் கூத்தர்

## ௩௬-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** எள் அளவு உள்ள சிறு பசி தாங்காமல் வருந்தி, அங்கும் இங்கும் ஓடி, சின்ன வயிற்றை எக்கிக்காட்டி, குழைந்து பவளம் போன்ற வாயின் உதடுகளைக் குவித்து விரித்து அழுது, துள்ளித் துடித்து, இடம் மாறி, தொட்டிலை உதைத்து, பெரிய விரலை வாயில் வைத்து, வாயின் கடையிலே எச்சில் சொட்ட, தோளில் மகரக் காதணி தவழ்ந்துவர மெதுவாகத் தவழ்ந்து, புன்சிரிப்புச் செய்து, தாயின் மடி மீது ஏறி அமர்ந்து விம்மி, பொருமி, தாய்முகம் பார்த்து, விரும்பும் உமையவளின் களப தனமாகிய கிண்ணத்தில் பால் பருகி, உள்ளம் களித்த மழலைச் சிறுவனே ! வருவாயாக ;

வளர்ந்தோங்கும் களபக் குரும்பைமுலை வள்ளி மணாளா ! வருக.

**அருஞ்சொற்பொருள் :—** பண்டி : வயிறு, துவர் : பவளம்.

குழந்தைப்பசி எள் அத்தனை சிறியதுதான் ; என்றாலும் அது அப்பசியினால் படுத்தும்பாடு மிகப் பெரியது. பிள்ளைச் செயலை இப்பாட்டு நன்கு விரித்துப் பேசுகிறது.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

எள்அத் தனைவந்து உறுபசிக்கும்
இரங்கிப் பரந்து, சிறுபண்டி
எக்கிக் குழைந்து, மணித்துவர்வாய்
இதழைக் குவித்து விரித்துஅழுது,

துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து,
தொட்டில் உதைந்து, பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீர்ஒழுகத்
தோளில் மகரக் குழைதவழ,

மெள்ளத் தவழ்ந்து, குறுமூரல்
விளைத்து, மடியின் மீதுஇருந்து,
விம்மிப் பொருமி முகம்பார்த்து,
வேண்டும் உமையாள் களபமுலை

வள்ளத்து அமுதுண்டு, அகம்மகிழ்ந்த
மழலைச் சிறுவா! வருகவே;
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா! வருகவே. ௩.௪௬

— பகழிக் கூத்தர்

## ௧௭-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** "பெரிதும் ஆதரிக்கும் அடியார்கள் பிறப்பை நீக்கிப் பெரிய வாழ்வையும் பயனையும் கொடுக்கவரும் பிள்ளைப்பிரான் என்னும் பேரை ஆண்டவனே!

உன்னை அடையாத அசுரர் குலத்தை நாசம் செய்தவனே!

சேவல் கொடியை உயர்த்தியவனே!

திருச்செந்தூரில் எழுந்தருளிய தேவனே!

தேவர்களைச் சிறையினின்றும் விடுதலை செய்த செல்வனே!"

எனக்கூறி, உனது திருமுகத்தைப் பார்த்து, களித்து, பால் கொடுக்கும் தாய்மார், பாராட்டி, புகழ்ந்து, ஆசையோடு "அப்பா! வா! வா!" என்று உனைப் போற்றுதற்குப் பரிவோடும் எக்களிப்போடும் அழைத்தால், வராமல் இருப்பதற்கு முறைதான் உண்டா? வடிவேல் முருகா! வா;

வளர்கின்ற களபம் அணிந்த குரும்பைக் கொங்கை வள்ளியின் காதலனே வருவாயாக.

**அரும்சொற்பொருள் :—** நிருதர் ; அசுரர். முலைத்தாயர் : பால் தர அமைந்த தாய்மார்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

"பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா!

சேரா நிருதர் குலகலகா!
சேவற் கொடியாய்! திருச்செந்தூர்த்
தேவா! தேவர் சிறைமீட்ட
செல்வா!" என்றுஉன் திருமுகத்தைப்

பாரா, மகிழ்ந்து, முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடன்"அப்
பாவா வா"என்று உனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்,

வாராது இருக்க வழக்குஉண்டோ?
வடிவேல் முருகா! வருகவே!
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா! வருகவே. ௬எ

— பகழிக் கூத்தர்.

## நஅ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :—கலையினுலே நிறையாத கலை உனக்கு உண்டு ;
இக் குமரனுக்கு நிறைந்த கலைஞானம் உண்டு ;
களங்கமாகிய மறுவாக அமைந்த குறைமான் உனக்கு உண்டு ;
குறமானுகிய வள்ளியின் எண்ணம் இவனுக்கு உண்டு ;
தொலையாத நட்சத்திரக் கூட்டம் உன்னைச் சுற்றிலும் உண்டு ;
மங்கல கூட்டமாகிய அடியார் பெருக்கம் இவனுக்கு உண்டு ;
உனக்குத் துளி அமுதம் உண்டு ;
இவனுக்கு மாருத சொல் அமுதம் உண்டு ;
உனக்குக் கொலை செய்யும் பாம்பு வழிப்பகையாக இருக்கிறது ;
இந்தக் குமரனுக்கு, கொடிய நஞ்சைக் கக்கும் பாம்பைக் கொத்தி எறியும் மயில் இருக்கின்றது ;
தெரிந்துகொள் ! ஆதலால் திரைக்கடல் சூழ்ந்த திருச்செந்தூர் வடிவேலனேடு ஏ, சந்திரா ! விளையாட வா ;
உலகத்தைத் தாங்கிய ஆதிசேடன் என்னும் பாம்பின் தலை நெளியுமாறு மயிலின் முதுகில் ஏறி வருகின்ற கதிர்வேலனுடன் விளையாட வா சந்திரா.

**அரும்சொற்பொருள்** :—கலை : சந்திரனுக்குரிய பதினாறு அம்சம். நிறை கலை : பெருகிய சாத்திர அறிவு. களங்கம், மறு இரண்டும் குற்றம் என்ற பொருளுடைய சொற்கள். கணம் : கூட்டம். கட் செவியும் அராவும் ஒரு பொருட் சொற்கள் ; பாம்பு என்பது பொருள். மேகாரம் : மயில்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## அம்புலிப் பருவம்

கலையால் நிரம்பாத கலைஉண்டு
உனக்கு;நிறை கலையுண்டு இவன்தனக்கு ;;
களங்கமறு குறைமான் உனக்குஉண்டு ;
குறமான் கருத்துண்டு இவன்தனக்கு ;

தொலையாத கணம்உண்டு உனக்கு ; மங்
கலகணத் தொகைஉண்டு இவன்தனக்கு ;;
துளிஅமுதம் உண்டுஉனக்கு ; இவனுக்கு
மாருத சொல்அமுதம் உண்டு;உனக்குக்

கொலையாடுஅ ராவழிப் பகைஉண்டு ;
கடுவிடம் கொப்புளிக்கும் கட்செவிக்
கோள்அரா வைக்கொத்தி எறியும்மே
காரம்இக் குமரனுக்கு உண்டு;கண்டாய் !

அலைஆழி சூழ்திருச் செந்தில்வடி
வேலனுடன் அம்புலீ ! ஆடவாவே !
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு
குமரனுடன் அம்புலீ ! ஆடவாவே ! ௬அ

—பகழிக் கூத்தர்

## ருகூ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** தையலராகிய பெண்கள் கட்டிய சிறுவீடு அழிந்துவிடுகிறதே என்பதற்காக நாங்கள் சொல்ல வில்லை; உன் நன்மைக்காகவே சொல்லுகிறோம். அம்மணல் வீட்டில் அப்பப் பெற்ற முத்துக்கள் நீ உதையும்போது உன் காலில் உறுத்த உனது அழகிய பொன் தண்டைக்கால் வலிக்க மாட்டாதா? தவிர,

புனிதமான வெள்ளைக் குழவித் திங்களைச் சடையிற் சூடிய சிவபெருமான், உன்னைத் தூக்கி உச்சிமோந்து அணைத்துத் தோளில் வைத்துக் கொள்ளும்போது அப்பெருமான் மணித்தோளில் உன் கால் புழுதி பட்டுவிடமாட்டாதா?

உலகம் அனைத்தையும் பெற்றெடுத்தும் ஆண்டு முதிராத இளம் பெண்ணாகிய பார்வதி தேவி, உன்னை மடியிலே வைத்துப் பால் ஊட்டி முகத்தோடு அணைக்கும்போது, உனது சிலம்புக்காலின் சிறு செந்தூசி அப்பி விடாதா? ஆதலால் வேண்டாம்; சிறியேங்களாகிய எங்கள் சிறு வீட்டை அழிக்காதே; அலைகள் முத்துக்களைக் கரைமீது வீசுகின்ற திருச் செந்தூர்ச் செல்வா! சிறிய மணல் வீட்டைக் கெடுக் காதே.

**அரும்சொற்பொருள் :—** வண்டல் : சிறு மணல் வீடு. தரளம் : முத்து. தவளம் : வெண்மை. சோதி : ஈண்டுச் சிவபெருமான். வதனம் : முகம். கழல் : வீரத்தண்டை.

சிற்றில் பருவம் என்பது ஆண் பிள்ளைகள், பெண் பிள்ளைகள் கட்டி விளையாடும் சிறு மணல் வீட்டை அழிப்பதுபற்றிக் கூறுவது. பாட்டு பெண் பிள்ளை கள் கூறுவதாக அமைந்திருக்கிறது.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## சிற்றில் பருவம்

தையல் மடவார் இழைத்தவண்டல்
தன்னை அழிக்கும் அதுக்குஅல்ல ;
தாளம் உறுத்தி உனதுபொற்பூம்
தண்டைத் திருத்தாள் தடியாதோ ?

துய்ய தவளப் பிறைமுடிக்கும்
சோதி எடுத்து முகந் து,அணைத்துத்
தோளில் இருத்தும் பொழு து,மணித்
தோளில் புழுதி தோயாதோ ?

வையம் அனைத்தும் ஈன்றுஎடுத்தும்
வயது முதிரா மடப்பாவை,
மடியில் இருத்தி முலைஊட்டி
வதனத்து அணைக்கில், உன்கழல்கால்

செய்ய சிறுதாள் செறியாதோ ?
சிறியேம் சிற்றில் சிதையேலே ;
திரைமுத்து எறியும் திருச்செந்தூர்ச்
செல்வா ! சிற்றில் சிதையேலே.

—பகழிக் கூத்தர்

## ௪0-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :— புகழ்பெற்ற சுக்கில புரட்டாதி பதினெட்டாம் நாளன்று, நம் புண்ணியத் திருநாட்டைப் பற்றிய சனி விலகி ஓடச் சனிக்கிழமையிலே, உலக மக்கள் அனைவரும் மகிழ்ச்சிகொள்ள மகநட்சத்திரத்திலே அவதரித்த பெரியவனை, பூமியில் வேறு எவருமே ஈடு இல்லாத மாட்சி மிக்க குணங்கள் வாய்க்கப் பெற்றவனை, வள்ளலை, இகழத் தக்க காரியங்கள் சிறிதும் இல்லாதவனை, எனது எளிய உள்ளத்திலே என்றைக்கும் வீற்றிருக்கின்ற எம்மானை, அழகிய காந்திப் பெருமானை நன்கு காப்பாற்றுவாயாக :

உலகம் முழுதையும் படைத்து, காத்து, கலைத்து, மறைத்து, அருளும் ஐந்தொழிலும் ஆற்றும் வலிமை பெற்றவனே! ஒழுக்கம் உள்ளவர் திரு உள்ளத்திலே இடையறாது வாழும் தேவ தேவனே.

சுக்கில புரட்டாதி பதினெட்டாம் நாள் சனிக்கிழமை மகநட்சத்திரத்தில் காந்தியடிகள் பிறந்தது. ஆங்கிலம் 1869-ம் ஆண்டு அக்டோபர் இரண்டாம் நாள்.

**அரும்சொற்பொருள்** :— மகிதலம் : உலகம். மாண்ட : மாட்சிமைப் பட்ட. திண்மை : வலிமை.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## காப்புப் பருவம்

புகழ்சேர்சுக் கிலஆண்டுப் புரட்டாதித்
திங்கள்பதி னெட்டாம் நாளில்,
புண்ணியநம் திருநாட்டைப் பிடித்தசனி
அகன்றுஓடச் சனிவா ரத்தில்,

மகிழ்கூர மக்கள்எலாம் மகம்வந்த
பெரியோனே, மகித லத்தில்
மற்றொருவர் ஒப்பில்லா மாண்டகுணம்
வாய்ந்தானே, வள்ளல் தன்னை,

இகழ்செய்கை எள்ளளவும் இல்லானை,
என்எளிய இதயம் தன்னில்
என்றும்உள எம்மானை, எழிற்காந்திப்
பெம்மானை, இனிது காக்க;

செகம்அனைத்தும் ஆக்கிஅளித்து அழித்துமறைத்து
அருள்ஐந்து செயலும் வல்ல
திண்மையனே! சீலம்உளார் திருமனத்தில்
தினம்உறையும் தேவ தேவே. ௩௦

— ராய. சொ.

## ௬௧-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** உலகமே கிடைப்பதாக இருந்தாலும் நடுவு நிலையினின்றும் பிறழாத நல்லவனே !

நாயனைய என்னை, நஞ்சாகிய உலகத் தீய வழிகளுள் சேர்ந்து விடாமல் ஆண்டுகொண்ட சீலனே !

கடமையை வாயினால் பிறருக்குச் சொல்லித் தாம் வேறுவிதமாகச் செய்கின்ற சின்ன மனிதர்கட்கும், 'வீணாகப் பேசாதீர் ! நீங்கள் சொல்வதை நீங்களே செய்து காட்டுங்கள்' எனப் பொருத்தமாகப் புகன்று உயர்ந்த வழியைப் பின்பற்றி, பெருஞ்சிறை புகுந்து, துன்பத்தை யெல்லாம் சுகமாகக்கொண்ட எந்தையே !

மோகன தாசனே !

விடத்தை ஒத்த கொடியவர்கட்கும் கருணைகாட்டும் தேவாமிர்தமே ! ஆடுக செங்கீரை ;

அருளே வடிவு எடுத்துப் பூமியில் அவதரித்தவனே ! தலை நிமிர்ந்து ஆடுக.

**அரும்சொற்பொருள் :—** ஞாலம் : உலகம். நண்ணுது : பொருந்ாது. அறம் : கடமை. ஏல : பொருந்த. இரும் : பெரிய. இன்னல் : துன்பம். ஆல் : விடம்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## செங்கீரைப் பருவம்

ஞாலம் பெறினும் நடுநிலை
தவறா நல்லோய்! நாயேனை
நஞ்சாம் உலகத் தீநெறி
யதனுள் நண்ணாது ஆட்கொண்ட

சீல! அறத்தை வாயால்
கூவிச் செய்கை மாறுபட்ட
சிறியோர் தமக்கும் "வீண்பேச்சு
உரையீர்; செய்து காட்டும்" என

ஏல உரைத்தே உயர்நெறி
பற்றி இரும்சிறை புக்குஅருளி,
இன்னல் அனைத்தும் இன்பம்
எனக்கொள் எந்தாய்! மோகனனே!

ஆல்அனை யார்க்கும் அருள்தரும்
அமுதே! ஆடுக! செங்கீரை;
அருள்வடி வங்கொண்டு அவனியில்
வந்தவ! ஆடுக! செங்கீரை. சுக

— *ராய. சொ.*

## ௬உ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து** :— அன்பினுலே உலகத்தை யெல்லாம் தன்வசமாக்கி, எவரும் செய்ய முடியாத அருமையான காரியங்களைச் செய்து, கருணையை, தர்மத்தை, உயர்ந்த ஆண்தகைமையை, நீங்காத இன்ப வாழ்க்கையை, எந்தக் காலத்துக்கும் இன்றியமையாத தைரியத்தை, எல்லா உயிரும் சமம் என்ற இனிமையான எண்ணத்தை, ஒன்றுக்கும் பற்ருத என்னைப்போன்ற சிறிய ஏழைமக்களின் உள்ளத்திலே பதியவைத்ததும் அல்லாமல் எளிய எனது உள்ளத்தே கோயில்கொண்டு குடியிருக்கும் கருணைப் பெருங்கடலே !

வலிய பாபிகட்குங்கூட அருள் அளிக்கும் வள்ளலே ! உனக்குத் தாலாட்டு ;

மக்கள் கடைத்தேறத் திருவவதாரம் செய்த மகாத்மா ! உன்னைத் தாலாட்டுகின்றேன்.

**அரும்சொற்பொருள் :—** இரும் : பெரிய. **கதி** : அருள்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## தாலப் பருவம்

அன்பால் உலகை வயப்படுத்தி
யாரும் செய்தற்கு அரியசெயல்
ஆற்றி, அருளை அறத்தைஉயர்
ஆண்மை தன்னை அகலாத

இன்ப வாழ்வை எஞ்ஞான்றும்
இன்றி யமையாத் தைரியத்தை
எல்லா உயிரும் சமம்என்னும்
இனிய கருத்தை, ஏதும்இலா

என்போல் சிறிய ஏழையரின்
இதயம் பதித்தது அன்றி,என்றும்
எளியேன் உள்ளம் கோயில்கொண்டு
இருக்கும் கருணை இருங்கடலே!

வன்பா தகர்க்கும் கதிஅளிக்கும்
வள்ளால்! தாலோ தாலேலோ;
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ. சஉ

— ராய. சொ

## ௪௩-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** மனம் தித்திக்கும் ; காது களிப்பெய்தும் ; உடம்பு பூரிக்கும் ; திருவாய் இனிப்புப் பெறும் ; கண் மகிழ்வடையும் ; உவட்டாத இன்ப நலம் வந்தணுகும் ; பிறகு, பழவினைகளெல்லாம் அழிந்து ஒழியும் ; கோப மென்பது, தனக்கு இங்கு இனி, இடம் இல்லை என்று எண்ணிப் புறங்காட்டி ஓடிவிடும் ; பேசும் பேச்சு நன்றாகவே அமையும் ; முத்தியும் கிட்டும் ; பெரிய கருணையானது, வேறு புக்லிடம் இல்லாமல் தன்னை வந்து அடையத்தக்க காந்தி என்ற வள்ளலே ! நின்னுடைய திருநாமத்தை உள்ளத்திலே பதிக்கவும் காதினால் கேட்கவும், வாயினால் வழுத்தவும், கண்ணினால் காணவும் பெறும் பாக்கியம் உடையவர் கட்கு.

அமைதி ஒழுகுகின்ற கனிந்த வாயினால் அமரத் தன்மை வாய்ந்தவனே ! முத்தம் தா.

செல்வா ! உன்னுடைய உண்மை கமழும் திருவாயினால் ஒரு முத்தம் தருக !

**அரும்சொற்பொருள் :—** புளகாங்கிதம் : மயிர்க்கூச்சு. முனிவு : கோபம். முதுகுகாட்டும் : புறங்காட்டி ஓடும்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## முத்தப் பருவம்

சிந்தை இனிக்கும் ; செவிஇனிக்கும் ;
தேகம் புளகாங் கிதம்எய்தும்
திருவாய் இனிக்கும் ; கண்களிக்கும் ;
தெவிட்டா இன்பம் சேர்ந்திடும்;பின்

முந்தை வினைகள் முறிந்தோடும் ;
"முனிவுஇங்கு இடம்ஏது இனி" என்று
மூதுகு காட்டும் ; மொழிநன்றும் ;
முத்தி கிடைக்கும் ; பெருங்கருணை

வந்து பொருந்தும், காந்திஎனும்
வள்ளால் ! நினது திருப்பெயரை
மனத்தில் பதிக்கச் செவிமடுக்க
வழுத்தக் காணப் பெறுவார்க்கு,

சிந்தும் சாந்தக் கனிவாயால்
தேவா ! முத்தம் தருகவே ;
செல்வா ! நின்தன் மெய்ம்மணக்கும்
திருவாய் முத்தம் தருகவே. ௪௩

— ராய. சொ.

## சச-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** ஐயனே ! வருக ; பாரத தேசத்தின் மன்ன ! வருக ;

உலகத்திற்கு ஒப்பற்ற ஆபரணமே! வருக ;

அடியேனை ஆட்கொண்டவனே ! வருக ;

பார் அனைத்தும் கடைத்தேற வருக ; உயிர்முழுவதற்கும் உயிராக அமைபவனே ! வருக ; உத்தம மக்களின் உணர்ச்சியே ! வருக !

ஒற்றை உடை உடுத்தவனே ! வருக ; எக்காலும் மெய்யே பேசுகின்ற செம்மையானவனே ! வருக ;

நிலமகளுக்கு ஒற்றைப் பொட்டாக விளங்குபவனே ! வருக ;

மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்கும் செல்வனே ! வருக ;

முறை கடவாத பெரியோய் ! வருக ;

சிறப்புப் பொருந்திய கையைப் பெற்றவனே ! வருக ;

கருணையைச் செய்யும் காந்தி ! வருக, வருக ;

உன் உள்ளத்தை யறிந்து அதற்குப் பொருந்த நடக்கும் கஸ்தூரி அம்மையார் கணவனே ! வருக, வருகவே.

**அரும்சொற்பொருள் :—** செய்ய : செம்மையானவனே. தெருள் : மெய்யறிவு. திறம்பா : கடவாத.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

அய்ய ! வருக : பாரதநாட்டு
அரசே ! வருக ; உலகிற்குளோர்
அணியே ! வருக : அடியேனை
ஆண்டாய் ! வருக ; அவனிஎலாம்

உய்ய வருக ; உயிர்க்குஎல்லாம்
உயிரே ! வருக ; உத்தமரின்
உணர்வே ! வருக ; ஓர்ஆடை
உடுத்தாய் ! வருக ; உண்மைஉரை

செய்ய ! வருக ; பூமிக்குளோர்
திலக ! வருக ; தெருள்அளிக்கும்
செல்வ ! வருக : நெறிதிறம்பாச்
செம்மல் ! வருக ; சீர்மருவு

கய்ய ! வருக ; கருணைபுரி
காந்தி ! வருக , வருகவே ;
கருத்திற்கு இசைந்த கஸ்தூரி
கணவா ! வருக ; வருகவே. சுசு

— *ராய. சொ.*

## சடு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** பெருமானே! வருக; அறங்கள் பெருகப் பிறந்தவனே! வருக; பெருமை மிக்க பெம்மானே! வருக; உலகத்துள்ளே பெரியவனே! வருக;

மற்றவர்கட்காக அருமையான நினது உடல் பொருள் உயிர் மக்கள் மனைவாழ்க்கை முதலிய எல்லா நலனை யும் விட்டுவிட்டு, ஒரே ஒரு கதர்த்துணி கட்டி எளிய வாழ்வைக் கடைப்பிடித்த தரும சொரூபியே! வருக;

" எல்லாவற்றையும் எளிமையாகச் சொல்லிவிடலாம்; அதன்படி செய்வதுதான் அருமை" என்று கூறிய சால்புடைய புலவன் வள்ளுவனின் குறள் உரையை மறுத்து, முதலில் எதையும் செயலில் காட்டிவிட்டுப் பிறகு அதைப் பிறருக்குச் சொல்லும் காந்தி! வருக, வருக; கருத்திற் கொக்க நடக்கும் கஸ்தூரிபாயின் நாதனே! வருக, வருக.

**அரும்சொற்பொருள் :—** பீடு : பெருமை.

" சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம் சொல்லிய வண்ணம் செயல் " என்பது குறள்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

பெரும ! வருக ! அறம்மலியப்
பிறந்தோய் ! வருக ; பீடுடைய
பெம்மான் ! வருக ; புவிக்குள்ளே
பெரியோய் ! வருக ; பிறர்பொருட்டா

அருமை உறும்நின் உடல்பொருளும்
ஆவி மக்கள் மனை ஆதி
அனைத்தும் விடுத்துஓர் கதராடை
அணிந்தே, ஏழ்மை நிலைகொண்ட

தரும உருவே ! வருக;எலாம்
"சாற்றல் எளிய அவ்வண்ணம்
சாதித் திடுதல் அரிய" எனும்
சான்ற புலவன் உரைமறுத்து,

கருமம் ஆற்றிப் பின்புசொலும்
காந்தி ! வருக, வருகவே ;
கருத்திற்கு இசைந்த கஸ்தூரி
கணவா ! வருக, வருகவே. சாடு

— ராய. சொ.

## சசு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** செந்நெல் விளைகின்ற அழகிய இந்திய நாடு செழிப்படையவும், உலகமானது கெட்ட வழிகளில் போகாது கடைத்தேறவும்,

சின்னக் காரியங்கள் அனைத்தும் சென்று அழிந்து போகவும்,

அறமானது தழைத்தோங்கவும்,

அரசர்களின் செங்கோல் தவருமல் மாட்சிமை வழியிலே செல்லவும்,

கள்ளைக் குடித்துக் கெடும் அறியாமை நீங்கவும்,

மக்களாகப் பிறந்தவர்களுள்ளே ஒரு கூட்டத்தாரைப் பிறப்புப்பற்றி வேறு எதையும் கருதாமல் தீண்டத் தகாதார் எனச் சொல்லித் தள்ளிவைக்கும் மயக்கம் தொலையவும்,

துன்பத்தைத் தருகின்ற வகுப்பு சமயம் என்ற பிரிவால் தோன்றும் ஆணவம் அகலவும்,

என்னை ஒத்த நின் அடியவர்களின் உள்ளம் களிதூங்க மனத்துளே விளையாடவும்,

இந்தச் சிறந்த இந்திய நிலத்தில் அவதரித்தருளும் கருப்பஞ் சாற்றைப்போல இனிக்க இனிக்கப் பேசும் காந்திப் பெருமானே ! வருக, வருக ;

கருத்துக்குப் பொருத்தமாக நடக்கும் கஸ்தூரியின் கணவனே ! வருக, வருகவே.

**அரும்சொற்பொருள் :—** மருள் : மயக்கம். இன்னல் : துயரம். கன்னல் : கரும்பு.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

செந்நெல் விளையும் திருநாடு
செழிக்க, உலகம் தீநெறியில்
செல்லாது உய்ய, சிறுமைஎலாம்
சென்று தேய, அறம்தழைக்க,

மன்னர் செங்கோல் வழுவாது
மாண்பில் செல்ல, மதுஅருந்தும்
மடமை ஒழிய, மக்கள்தமை
மதியாது ஒதுக்கும் மருள்அகல,

இன்னல் நல்கும் சாதிமத
இறுமாப்பு ஏக, என்அன்னையார்
இதயம் களிக்க விளையாட,
இம்மா நிலத்தில் பிறந்தருளும்

கன்னல் அனைய திருமொழிசேர்
காந்தி ! வருக, வருகவே ;
கருத்திற்கு இசைந்த கஸ்தூரி
கணவா ! வருக, வருகவே, சசு

— ராய. சொ.

## சஎ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** நாம் ஆகாயத்திலே இருக்கின்றோம், அவன் (காந்தி) மண்ணுலகத்திலே இருக்கின்றான்; நாம் அவனோடு விளையாட உடன்படுதல் நம் பெருமைக்குப் பொருந்தாது என நினைப்பாயோ? பெரிய சந்திரனே! உனது நினைப்பு நன்றாக இருக்கிறது!

நீ செல்கின்ற தேசத்திலே புண்ணியனாகிய காந்தியின் புகழ் வீசாத இடம் எங்கேனும் இருக்கிறதா ?

உலகம் தெரிந்து கொள்ளுமாறு உண்மையைச் சொல்; புத்திவிசாலம் அடையாமல் வீட்டைவிட்டு வெளியுலகத்தையே அறியாது அடைபட்டுக் கிடப்பவன் நீ அல்லவே;

தாங்கள்தாம் (உலகத்திலேயே) உயர்ந்தவர்கள் என்று இறுமாப்போடு வாழும் மேற்கு நாட்டவரும் 'உலகில் பெரிய ஒருவர்' என்று யாரைச் சொன்னார்கள் ?

அப்பெரியவர் எந்த இடத்தில் இருந்தால்தான் என்ன இழிவு;

தக்கவர்களைப் பார்த்து அவர்களைச் சேர்தலே சிறப்பு என்று கூறுவர் அறிஞர். ஆகையினாலே சுணங்காமல் விளையாட வா சந்திரா!

அன்பதனால் அவனியை ஆள்கின்ற ஐயனாகிய சிறந்த காந்திப் பெருமானோடு விளையாட வா அம்புலீ!

**அரும்சொற்பொருள் :—** புந்தி : புத்தி. இல் ; வீடு. தருக்கு : செருக்கு.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## அம்புலிப் பருவம்

நாம்விண்ணில் உறைகின்றோம், அவன்மண்ணில்
உறைகின்றான்; நாம்அவனோ டாடநேரல்
நம்பெருமைக்கு அழகுஅன்றுஎன்று எண்ணுவையோ ?
மாமதியே! நன்றுநினது எண்ணம்!நீதான்

போம்நாட்டில் யாண்டுஇல்லைப் புண்ணியனின்
புகழ் ?உண்மை புவிஅறியப் புகலுவாயே ;
புந்திவிரிவு இல்லாமல் இல்அன்றிப்
பிறிதறியார் போன்றவன்நீ அல்லையே ;

தாம்அதிகம் உலகில்எனத் தருக்கோடு
வாழ்ந்திடுவார் தாங்களுமே பெரியர்என்னச்
சாற்றியதுஅன்று யாரை?அவர் யாண்டுறைந்தால்
என்னகுறை? தக்கவர்பார்த்து அடைதலேமேல்

ஆம்என்பர் அறிவுள்ளார்: ஆதலினால்
தாழாமல் அம்புலீஇ! ஆடவாவே;
அன்பதனால் உலகுஆளும் ஐயன்உயர்
காந்தியினோடு அம்புலீஇ! ஆடவாவே. சஎ

— ராய. சொ.

## சஅ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** அம்புலி! நீ பதினறு கலைகளை உடையாய்! காந்தி நெய்த ஒரு கலையாகிய உடையொடு ஒழுங்கான பலகலைகளாகிய சாத்திரங்களை அறிந்தவன்; உனக்குக் களங்கம் உண்டு; காந்தியோ களங்கம் அற்றவன்.

நல்ல மேகம் வந்து மறைத்து விடுமானல் இருளைப் பெறுவாய்;

காந்தியின் ஒளியை ஆற்றல் கொண்டு மறைக்கக் கூடியவர் மண்ணுலகினும் இல்லை; வானுலகினும் இல்லை; எந்த உலகினுமே இல்லை.

சிறந்த திங்களே! நீ நாள்தோறும் முறைப்படி உடல் தேய்ந்து அழிவாய், ஒளி குறைவாகப் பெறுவாய், பிறகு மிகுதியை அடைவாய், உனக்கு ஒரு நிலையில்லை:

வலிமை நிறைந்த எங்கள் தலைவன் சிறப்பான நிறைவு பெற்றவன்.

நீ தோன்றுவ தெல்லாம் இராக் காலத்திலேதான்;

எங்கள் சீலனின் பிரகாசம் நொடிப்பொழுதுகூட இல்லாமற் போகாது.

ஆகையினல் அந்தப் பெரிய மனிதனேடு ஆடவா சந்திரா;

அன்பினலே உலகத்தை ஆள்கின்ற பெருமையில் உயர்ந்த காந்தியோடு விளையாட வா அம்புலீ!

**அரும்சொற்பொருள் :—** கலைகள் ஈரெட்டு; சந்திரனுக்குள்ள பதினறு அம்சம். ஒற்றைக்கலை: ஒற்றை உடை. பல்கலை: பலநூல்கள்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## அம்புலிப் பருவம்

நீ,கலைகள் ஈரெட்டே தாம்உடையாய்
நேயனவன் நெய்தஒற்றைக் கலையொடுஎண்ணில்
நேரான பல்கலைகள் தாம்உடையான் ;
நினக்குமறு உண்டு,அன்னுன் மறுஇலாதான் ;

வாகுடைய மழைமறைத்தால் இருள்அடைவாய்,
அவன்ஒளியை வலிகொண்டு மறைக்கவல்லார்
மண்அகத்தும் வானகத்தும் யாண்டும்இலை !
மாமதியே ! நீ,நாளும் வரிசையாகத்

தேகந்தான் தேய்ந்தழிவாய், ஒளிகுறைவாய்,
பின்மிகுவாய், திண்மைநிறை எங்கள்ஐயன்
சீரான நிறைவுஉள்ளான் ; நின்தோற்றம்
இரவில்தான், சீலன்ஒளி இறையும்நீங்காது

ஆகஉளது ; ஆதலினுல் அப்பெரிய
அண்ணலினேடு அம்புலீ ! ஆடவாவே ;
அன்பதனுல் உலகுஆளும் ஐயன்உயர்
காந்தியினேடு அம்புலீ ! ஆடவாவே, சஅ

— ராய. சொ.

## சகூ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** திருவள்ளுவரும் நீயும் பலவகையிலே ஒப்பு உடையவர்கள் என்று கூறலாம்.

அந்த அறிவு வள்ளல் நெய்தல் தொழிலின் உயர் சிறப்பை அறிந்து அதனை மேற்கொண்டார்; நீயும் அந்தத் தொழிலை ஏற்றாய்.

தள்ளத்தக்க குணங்கள் இல்லாத மனையாளை அவ் வள்ளுவர் பெற்றிருந்தார்; அந்த வாசுகியைவிட இம்மி கூடக் குறையாத குணங்கொண்ட எழில் மனையாளை நீ அடைந்தாய்.

அவ் வள்ளுவர் அந்தக் காலத்திலே மக்கள் உய்வு கருதிக் குற்றமற்ற அறக் குறளை வழங்கினர்; தள்ளுதற்கு அரிய அவ் வள்ளுவர் அறத்தை இக் காலத்துக்கு ஏற்பக் குறையாமல் நீயும் சொல்லுகின்றாய்.

ஆகையினாலே, தகுதிபெற்ற நீ, எங்களுடைய குளிர்ச்சியும் இனிமையும் கொண்ட தெள்ளிய தமிழ் வள்ளுவனின் திரு அவதாரம் என்று செப்பலாம்; சிறிய தேரை உருட்டி யருள்க;

உலகத்திலே உயர்ந்த இணையற்ற காந்திப்பெருமானே! இராட்டினச் சக்கரத்தைச் சுழற்றும் நின் செவ்விய கையினால் சிறுதேரை உருட்டி அருள்வாயாக.

**அரும்சொற்பொருள் :—** எள்ளுகுணம் : இகழத்தக்க குணம். ஏதம் : குற்றம். திகிரி : இராட்டினம்.

# காந்தி பிள்ளைத் தமிழ்

## சிறு தேர்ப் பருவம்

வள்ளுவரும் நீயும்பல் வகையினுல் ஒப்புஎன்ன
வகுக்கலாம்; அந்த ஞான
வள்ளலுயர்நெய்தொழிலின்மாண்பறிந்துகைக்கொண்டார்
நீயும்அத் தொழிலை ஏற்ருய்;

எள்ளுகுணம் இல்லாத மனைவிஉளார் அவர்;அதினும்
இம்மியும் தாழ்வுஉ ருத
எழில்மனையைநீஉடையாய்;அவர்அந்நாள்மக்கள்உய
ஏதம்இல் அறம்உ ரைத்தார்;

தள்அரிய அவ்அறத்தைத் தாழாமல் இற்றைநாள்
தகவுஅறிந்து இனிது நீயும்
சாற்றுகின்ருய்; ஆதலினுல் தகுதியுடை நீ,எங்கள்
தண்மையோடு இனிமை சாரும்

தெள்ளுதமிழ் வள்ளுவனுர் திருவரவுஎன்று இயம்பிடலாம்;
சிறுதேர் உருட்டி அருளே;
செகத்தில்உயர் தனிக்காந்தி! திகிரிபுனை செங்கையால்
சிறுதேர் உருட்டி அருளே. சகூ

— ராயசொ

## ருO-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** கலைப்பகுதிகள் நிரம்பிய பேரறிவு வாய்ந்த படித்த திருவாளர் கேள்வி நலத்தால், பழுக்கப் பழுக்க அமுதம் ஊற்றெடுக்கின்ற தெய்வத் தன்மை கொண்ட வேதமும்,

முதற் சங்கத்திலே இருந்த தலைமையான பாவலரின் இனிய சுவைமிக்க பழமும் குளிர்ந்த தேனுகிய நறையும் சேர்த்துப் பிழிந்து வடிகட்டி எடுத்த ரசம் கனிந்து ஊற்றுப் பெருக்கெடுத்திருந்த பசுமையான தமிழும் மணக்க,

பெரிய கரைகளை அலைகள் பாய்தலால் அழிக்கும் நீரைக்கொண்ட தெள்ளிய கடல் சூழ்ந்த உலகத்தையும் எல்லா அண்டங்களையும் ஊழிக் காலத்து அழிய அழியத் திரும்பத் திரும்பப் பலமுறை பெற்றும் அழகு முதிர்ச்சியடைய, தான் உடல் முதிர்ச்சியடையாத எனது தாய் ஈசுவரியினுடைய, அமிழ்தத்தையே கருவுற்றுப் பெற்றுக்கொண்ட முலையின் பால் மணம் கமழும் சிவந்த கனிவாயினுல் முத்தம் தருவாயாக;

முத்தமிழையும் ஆராயும் வைத்திஸ்வரன் கோவிலில் குடிகொண்ட முத்துக் குமாரா முத்தம் தருக.

**அரும்சொற்பொருள் :—** முதுக்குறைவு : பேரறிவு. வைப்பு : உலகம். சூல் : கரு. கந்தபுரி : வேளூர்.

கடவுள் மறையும் பசும் தமிழும் நாற, அம்மை திருமுலைப்பால் நாறும் கனிவாய் முத்தம் தருக என முடித்தல் வேண்டும்.

# முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ்

## முத்தப் பருவம்

கலைப்பால் நிறைந்த முதுக்குறைவில்
கல்விச் செல்வர் கேள்விநலம்
கனியக் கனிய அமுதுஊறும்
கடவுள் மறையும், முதற்சங்கத்

தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்தேன் நறையும் வடித்துஎடுத்த
சாரம் கனிந்துஊற்று இருந்தபசும்
தமிழும் நாற, தடங்கரைகொல்

அலைப்பாய் புனல்தெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறைஈன்றும்
அழகு முதிர, முதிராஎன்
அம்மை அமுது சூல்கொண்ட

முலைப்பால் நாறும் செங்கனிவாய்
முத்தம் தருக, முத்தமே;
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா! முத்தம் தருகவே. ௫0

— குமரகுருபரர்.

## ருக-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** கச்சு அணிந்த பெரிய கொங்கையில் குடித்த பால் ஒழுகி வழிவதைப்போல முத்துப்போன்ற பற்களால் நிலவைப் பொழிகின்ற மழலைவாயின் முத்தத்தைப் பருகியும், தலைஉச்சியை முகந்தும்,

தங்கள் திருமடியிலே வைத்துப் பாராட்டியும், தங்கள் கண்களின் மணியிலே படியும் நினது வடிவப் பாவையைக் காட்டி 'இந்தப் பாலகரோடும் நீ விளையாடுக' என்று சொல்லியும் தாங்கள் கண் களித்து,

மாலை யணிந்த, திங்களை முடித்த, தீரா நோய் தீர்த்த தலைவனும், அத்தலைவனுடைய நெருப்பு மேனியில் ஒருபாதி குளிர்ச்சிபெற அவ் உடம்பில் ஒரு பக்கத்திலே இருக்கும் தையல்நாயகித் தாயும் உன்னைச் சீராட்டி விளையாடும் பேறு பெற்ற தேவ சேனாபதிக் கடவுளே ! சிறு தேர் உருட்டி யருளுக ;

செல்வம் வளர உடன் வளர்கின்ற வேளூர் முத்தையனே ! உன் சிறிய தேரை உருட்டி அருள்புரிவாயாக.

**அரும்சொற்பொருள் :—** வார் : கச்சு. மணி : முத்து. முறுவல் : பல்.

தீராத வினைதீர்த்த தம்பிரான், புள் இருக்கு வேளூரில் கோவில்கொண்ட வைத்தியநாதக் கடவுள். தையல் நாயகி, அவ்வேளூர் அம்பிகையின் பெயர்.

# முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ்

## சிறு தேர்ப் பருவம்

வார்ஆட்டு தடமுலைப் பால்ஒழுகி
வழிவதென மணிமுறுவல் நிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டும், உச்சிமோந்
தும்,திரு மடித்தலத் தினில்இருத்திப்

பாராட்டி யும்,தமது கண்மணிப்
பாவைநின் படிவமாகக் காட்டி "இப்
பாலரோடும் விளையாடு" எனப்பணித்
தும்,தங்கள் பார்வைகளி யாடச்செயும்

தார்ஆட்டு மதிமுடித் தீராத
வினைதீர்த்த தம்பிரானும் தம்பிரான்
தழல்உருவில் ஒருபாதி குளிரஒரு
புறம்நின்ற தையல்நா யகியும்வைத்துச்

சீராட்டி விளையாடு சேனு
பதிக்கடவுள்! சிறுதேர்உ ருட்டியருளே;
திருவளர வளர்கந்த புரிவளர்
இளம்குமர! சிறுதேர்உ ருட்டியருளே. ருக

— குமர குருபரர்.

## ௫௨-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** பொன் போன்றவளே! வருக; மூன்று உலகங்களிலும் நிறைந்தவளே! வருக;

அடியேனைக் காத்தவளே! வருக; பாண்டி நாட்டரசன் மகளே! வருக; முகில்போன்ற திருமாலுக்குத் தங்கையான மின்னல் கொடியே! வருக; மெய் அறிவுச் சுடரே! வருக; நான்கு வேதங்களின் விரி பொருளே! வருக; பேரின்பத்தின் விளைவே! வருக; அருள் நிறைந்த தாயே! வருக; உள்ளம் நெக்கு நெக்கு உருகுவார்க்கு அணித்தாக இருப்பவளே! வருக; மலர்வாழ் மடந்தையராகிய திருமகளுக்கும் கலை மகளுக்கும் அரசாக அமைந்தவளே! வருக; சொல்லமுடியாத சிறப்புடைய அம்மையே! வருக;

தீயைக் கையிலே கொண்டு ஆடும் மன்னனாகிய சிவபெருமானின் அழகிய உடம்பிலே கூறுகொண்ட இளமையான மயிலே! வருக; வருகவே.

மதம்பொழியும் ஆனைக்காவில் தங்கும் மடப்பிடியே! வருக; வருக.

**அரும்சொற்பொருள்:—**மாதங்கம் : யானை. வனம் : காடு. மாதங்கவனம் : ஆனைக்கா, திருவானைக்கா என்னும் தலம். அங்குள்ள அம்பிகையின் பெயர் அகிலாண்ட நாயகி.

# அகிலாண்ட அம்மை பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

பொன்னே! வருக; மூஉலகும்
பூத்தாய்! வருக; நாயேனைப்
புரந்தாய்! வருக: வழுதியர்கோன்
புதல்வி! வருக; முகிற்குஇளைய

மின்னே! வருக; மெய்ஞ்ஞான
விளக்கே! வருக; மறைநான்கின்
விரிவே! வருக; பேரின்ப
விளைவே! வருக; மிகும்கருணை

அன்னே! வருக; அகம்நெகுவார்க்கு
அளித்தாய்! வருக; அலர்மடவார்க்கு
அரசே! வருக: உரைப்பஅருஞ்சீர்
அம்மே! வருக; அழல்காத்து

மன்ஏர் உடலம் பகிர்ந்தஇள
மயிலே! வருக; வருகவே;
மதமா தங்க வனத்துமட
மானே! வருக; வருகவே. ருஉ

— *மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.*

## ருரு-ஆவது பாட்டின் பொருள்.

**கருத்து :—** வேலாயுதம் போன்ற கண்ணைக் கண்டு மயங்கிப் பயந்து பதுங்கி நீரிலேயுள்ள கயல்மீன்கள் ஓட்டம் பிடிக்கவும்,

ஆபரணம் அணிந்த கழுத்தைப்பார்த்து நிறைந்த கருவுடைய சங்குகள் கத்திக்கொண்டு ஓடவும்,
நீரிற் குடைந்தாடும்போது ஒருபிடி யளவேயுள்ள இடுப்பையும் விளங்குகின்ற குழையணிந்த காதையும் பார்த்து ஏராளமான கொடிவகைகள் மெல்லிய வள்ளைக்கொடியோடு கூடி வணங்கி நிற்கவும்,

கடைக் கண்ணனது சிவபெருமான் சடையில் வாழும் கங்கையை வெகுளும்போது அடையும் சிவப்பு நிறத்தைக் காட்டவும், பவளத்தை ஒத்த உதடுகள் சிவப்புமாறி வெளுக்கவும்,

கருணைக்கொடியாகிய நீ நின்று,

ஆத்தி மாலை விளங்குகின்ற முடியுடைய சோழ மன்னனின் காவிரித் துறையிலே நீர் ஆடுக ;

ஆனைக்காவில் உறைகின்ற அகிலாண்டநாயகி! காவிரி நீர் ஆடியருள்க.

**அரும்சொற்பொருள் :—** கண்டம் ; கழுத்து. கமம்சூல் : நிறை கருப்பம். பணிலம் : சங்கு. முரன்று : கத்திக் கொண்டு. பாரா : பார்த்து. விடை : காளை. இவர் : தங்கிய. மாது : கங்கை. காதுதல் ; வெகுளுதல். துப்புஅன : பவளத்தை ஒத்த. ஓட்டம் : உதடு. விளர்ப்ப : வெளுக்க. ஆர் : ஆத்தி. தும்பி : யானை.

அம்பிகை குடைந்து நீராடுங்கால் நீரில் வாழும் அவள் அங்கங்கட்கு உபமானமான பொருள்கள் கலங்குகின்றன. கண்ணுக்குக் கயல்மீனும் கழுத்துக் குச் சங்கும் இடைக்குக் கொடியும் காதுக்கு வள்ளையும் ஒப்புப் பொருள்கள்.

# அகிலாண்ட அம்மை பிள்ளைத் தமிழ்

## நீராடல் பருவம்

படைவிழி கண்டு மருண்டு
வெருண்டு பதுங்கிக் கயல்ஒழிய,
பணிஅணி கண்டம் கண்ட
கமஞ்சூல் பணிலம் முரன்றுஒழிய,

குடைதொறும் ஒருபிடி இடையும்
இலங்கு குழைக்கா தும்பாராக்
கொள்ளைக் கொடிகள்மென் வள்ளைக்
கொடியொடு கூடி வணங்கல்கொள,

கடைவிழி விடையவர் சடைஇவர்
மாதைக் காதும் போதுறுதல்
காட்டத் துப்பன ஒட்டம்
விளர்ப்பக் கருணைக் கொடி!நின்றுஆர்த்

தொடைஅலர் சென்னிச் சென்னிப்
பொன்னித் துறைநீர் ஆடுகவே;
தும்பிவ னத்துறை அம்பிகை!
பொன்னித் துறைநீர் ஆடுகவே! ருங

— மகாவித்துவான், மீனாட்சி சுந்தரம்பிள்ளை.

## ருசு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** உலகம் அனைத்தும் அழிந்தொழிந்தாலும் அழியாத சீகாழிப் பதியிலே, அந்தணர் வகுப்பிலே பிறந்து,

சிவபெருமானுடன் உமையவள் காட்சி தந்து கிண்ணத்தில் கறந்து கொடுத்த செழுமையான குளிர்ந்த முலைப் பாலைப் பருகி, முத்துப் பல்லக்கிலே ஏறி, மதுரை நகர் சென்று, பாண்டியன் நோயையும் சமணப் பகையையும் மங்கையர்க்குத் தனி அரசியின் துயரத்தையும் தீர்த்து,

நல்ல தேனனது வழிந்து கொட்டுவதுபோல, இனிமை பழுத்து உதடுகளின் கடை துடிக்குமாறு வடிகட்டித் தெளிவாக எடுக்கப்பெற்ற செந்தமிழிலே தேவாரப் பாடலை சிவபெருமான் கேட்குமாறு சொல்லிச் சிவந்துபோன கனிந்த வாயை உடைய ஆறுமுகனே! முத்தம் தருக;

முத்துக் குமாரனே! திருமலையில் வாழும் முருகனே! முத்தம் தருக.

**அரும்சொற்பொருள் :—** தோணிபுரம் : சீகாழி. வள்ளம் : கிண்ணம். முத்தின் சிவிகை : முத்துப் பல்லக்கு.

இப்பாடல் பகரும் செயல்கள் அனைத்தும் திருஞான சம்பந்தப் பெருமானைப் பற்றியவை. முருகக் கடவுளே சம்பந்தமூர்த்திகளாகப் பிறந்தார் என்பது கருத்து.

திருமலை என்பது திருக்குற்றாலத்துக்கு அணித்தேயுள்ள குமரன் குடிகொண்ட ஓர் மலைத் தலம்.

# திருமலைப் பிள்ளைத் தமிழ்

## முத்தப் பருவம்

அழிந்து புவனம் ஒழிந்திடினும்
அழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தின் உதித்து,அரனோடு
அம்மை தோன்றி அளித்தவள்ளச்

செழுந்தண் முலைப்பால் குடித்து,முத்தின்
சிவிகை ஏறி, மதுரையில்போய்ச்
செழியன் பிணியும் சமண்பகையும்
தேவி துயரும் தீர்த்தருளி,

வழிந்து நறுந்தேன் உகுவனபோல்
மதுரம் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க

மொழிந்து, சிவந்த கனிவாய்ச்சண்
முகனே! முத்தம் தருகவே;
முத்துக் குமரா! திருமலையின்
முருகா! முத்தம் தருகவே, ௫௪

— *கவி ராச பண்டாரத்தையா.*

## ருரு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** கட்ட நிற்காத ஆடையும் அரைஞாணும் சுற்ற வா ;

சுரந்து ஊற்றுகின்ற கடைவாயின் நீரைத் துடைக்கின்றேன் வா ;

தாயாக இருந்து நம்மை அளிக்கும் கங்கையின் நல்ல நீரிலே குளிப்பாட்ட வேண்டும் வருக ;

உனது அருமையான பாதங்களை என் கண்களிலே தூக்கி ஒத்திக்கொள்ள வேண்டும் அப்பா! வந்துவிடு;

இடையறுது கொட்டும் திருமுலைப் பாலைக் குடிக்க வந்திடுக ;

வீணை ஒலியும் தெவிட்டிவிடுமாறு மழலைப் பேச்சுப் பேச வருக ;

நின் வாயினுலே எனக்கு ஒரு அழுத்தமான முத்தம் தருவதற்கு வருக வருக ;

வரத்தை நிச்சயமாகத் தரவல்ல திருமலையிலுள்ள மழலைப் பிள்ளாய் ! வருவாயாக.

**அரும்சொற்பொருள்:—** தோயா : அணையாத ; குழந்தைக்குத் துகிலைக் கட்டக் கட்ட அது நிற்காது அவிழ்ந்தே விழும். ஆய் : தாய். பதம் : கால். வீயாது : அழியாமல். மிசைய : சாப்பிட. விள்ள : பேச. ஆணி : அழுத்தம். வரதம் : வரம். சரதம் : நிச்சயம்.

# திருமலைப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

தோயாத் துகிலும் அரைவடமும்
சுற்ற வருக வருகவே;
சுரந்து வடியும் கடைவாய்நீர்
துடைக்க வருக வருகவே;

ஆயாய் ஈன்று கங்கைநல்நீர்
ஆட்ட வருக வருகவே;
அருமைப் பதம்என் கண்ணில்எடுத்து
அணைக்க வருக வருகவே;

வியாது ஒழுகும் திருமுலைப்பால்
மிசைய வருக வருகவே;
வீணை தெவிட்ட மழலைமொழி
விள்ள வருக வருகவே;

வாயால் எனக்கோர் ஆணிமுத்தம்
வழங்க வருக வருகவே;
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி! வருகவே. ருரு

— கவிராச பண்டாரத்தையா.

## ருசு-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** சூரியனை மறைத்துப் பகலை இரவாக்கிய வஞ்சனையில் பெரிய நினது மாமனாகிய கண்ணன், அந்தக் காலத்திலே இடையர் வீடுதோறும் நுழைந்து உறியில் தொங்கிய பாலை நடுவிலே அள்ளிக் குடிக்க விட்டுக்குரியவர் இரண்டு கைகளையும் கட்டிப்போட்டு விடவில்லையா ?

இடைப்பெண்கள், 'உலகத்தைக் காக்கும் கடவு ளல்லவா, இவனைக் கட்டிப் போட்டால் ஆபத்து' என்று அஞ்சினார்களா? கட்டாமல் போகவிட்டு விட்டார்களா ?

அந்தோ! வருந்தி, நாங்கள் தாய்மார்களிடத்திலும் வளர்த்தவர்களிடத்திலும் அழுதுகொண்டே சொன்னோமானால் உன்னைக் கோபிக்க மாட்டார்களா ?

எல்லாமாய் நிறைந்து நிற்கும் சிவபெருமான் மகன் என எண்ணிப் பயந்து போய் விடுவார்கள் என நினைக்காதே.

சிறுமிகளாகிய எங்கள் சிறு வீட்டைக் கெடுக்காதே. குழந்தாய்! சேயூர் வாழ் குமரா! சிறியேங்களுடைய சிறு இல்லைச் சிதைக்காதே.

**அரும்சொற்பொருள் :—** விரகு : வஞ்சனை. மாமன் : கண்ணன்.

குடவரும் பொதுவரும் இடையர். செய்யோன் : சிவ பெருமான்.

கண்ணபிரான் சூரியனை மறைத்துப் பகலை இரவாக்கியது பாரதக் கதை.

# சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்

## சிற்றில் பருவம்

வெய்யோன் பகலை இரவாக்கும்
விரகிற் பெரிய நின்மாமன்
மேல்நாள் பொதுவர் அகம்புகுந்து
வெண்பால் உறியின் நடுக்குழிப்பக்

கையோர் இரண்டும் பிணித்திலரோ?
குடவர் மடவார் சகம்காக்கும்
கடவுள் எனத்தான் பயந்தனரோ?
கட்டாது அகல விட்டனரோ?

ஐயோ! புலந்து தமியேமும்
அன்னை மார்க்கும் செவிலியர்க்கும்
அழுது மொழிந்தால் சீருரோ?
அனைத்தும் ஒருவன் ஆகிநிற்கும்

செய்யோன் மகன்என்று அஞ்சுவரோ?
சிறியேம் சிற்றில் சிதையேலே;
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே. ருசுஉ

— *அந்தகக் கவி வீரராகவ முதலியார்.*

## கள-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** உருகாத உள்ளமும் சிவஞானத்தைத் தெரிந்துகொள்ளாத அறிவும் உனது புகழைப் பேசாத நாவும் பிறர் பேசக் கேட்டு மகிழ்ந்து இனிமையான ஆறுபோல நீரைப் பெருக்காத கண்ணும் பெற்ற என்னை,

பிறவி என்ற கடலிலே வீழ்ந்துவிடாமல், பேணி எடுத்து இவ்விடத்தே எனது மனத்தைவிட்டுப் பிரியா திருக்கின்ற திருவிரிஞ்சை நகர் வாழும் முருகா! வருக;

நான்கு மறைகட்கும் முதல்வனே! வருக;

வினை தீர்க்கின்ற முன்னவனே! வருக;

மலர் போன்ற ஆறுமுகத்தை உடையவனே! வருக;

திருமாலின் மருமகனே! வருக;

மயிலிலே ஏறுகின்ற மன்னனே! வருக;

அடியார்களின் வாழ்வாக இருப்பவனே! வருக;

தெய்வங்களின் முடிமாணிக்கமே வருக; வருக.

**அரும்சொற்பொருள் :—** உவந்து ; மகிழ்ந்து. சதுர் வேதம் : நான்மறை. முனைவன் : கடவுள்.

திருவிரிஞ்சை என்னும் இத் தலம் வேலூருக்கு மேற்கே அ, மைல் தூரத்தில் உளது.

# திரு விரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

உருகா மனமும் சிவஞானம்
உணரா அறிவும் உனதுபுகழ்
ஓதா நாவும் ஓதக்கேட்டு
உவந்தே இனிய நதிபோலப்

பெருகா விழியும் உடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமல்
பேணி எடுத்துஇங்கு எனதுஉள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழும்

முருகா ! வருக ; சதுர்வேத
முதல்வா ! வருக ; வினைதீர்க்கும்
முனைவா ! வருக ; மலர்ஆறு
முகவா ! வருக ; திருமாலின்

மருகா ! வருக ; மயில்ஏறும்
மன்னா ! வருக ; அடியார்கள்
வாழ்வே ! வருக ; தெய்வசிகா
மணியே ! வருக ; வருகவே. ருஎ

— *மார்க்க சகாய தேவர்*

## ருஅ-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து :—** கருப்பஞ்சாறு போன்ற குதலைப் பேச்சைக் கொண்ட சிவந்த கனிவாயையும் பொற்குடம் போன்ற கொங்கையையும் உடைய வயலில் வேலை பார்க்கும் பெண்களின் கரிய கண்ணாகிய பூவைப் பார்த்து மலர் நீர் நிலையிலே தாமரையின் பக்கத்திலே மொட்டு அவிழ்ந்து விரியும் நல்ல நீலோற்பலப் பூ என எண்ணி, வண்டுகள் தங்கள் பெண்களோடு தேடிச் சுற்றி வரும் ;

அவர்கள் அணிந்துள்ள வெண்மையான குளிர்ந்த முத்துக்கள் பொழிகின்ற நிலவினால் நல்ல அல்லி மலர் மலரும் ;

பின்னப்பெற்ற அப்பெண்களின் கூந்தலை மேகம் என நினைத்து நிறைந்த சிறந்த களிமயில்கள் ஆடா நிற்கும் ;

அன்னாருடைய புரளுகின்ற வளையல் அணிந்த கைகளைத் தாமரைப்பூ எனக்கருதி அன்னப் பறவைகள் பிரியாது மகிழ்ந்து அக் கைகளில் ஏறிக்கொள்ளும் ;

இவ்வளவு சிறப்பு வாய்ந்த அழகிய வயல் உடுத்த திருத்தணிகை மலையின் வாழ்வே ! வருக ;

மலையரையன் பெற்றெடுத்த உமையவளின் கண் மணியே ! வருவாயாக.

**அரும்சொற்பொருள் :—** கன்னல் ; கரும்பு. கலசம் : குடம். நன்னர் : நல்ல. குவளை : நீலம். அறுகால் : வண்டு. தரளம் : முத்து. குமுதம் : அல்லி. கஞ்சம் : தாமரை. அனம், அன்னத்தின் இடைக்குறை ; பணை : வயல் ; பண்ணை என்பதன் நடுக்குறைந்து நின்றது.

# திருத் தணிகைப் பிள்ளைத் தமிழ்

## வருகைப் பருவம்

கன்னல் குதலைச் செங்கனிவாய்க்
கலச முலைப்பொற் கடைசியர்தம்
கருங்கண் மலரைப் பூந்தடத்தில்
கமலத்து அருகு முறுக்குஅவிழும்

நன்னர்க் குவளை எனஅறுகால்
நாடிப் பெடையி னெடுஞ்சுழலும் ;
நகைத்தண் தரளம் பொழிநிலவால்
நறும்பூம் குமுதம் வாய்விரியும் ;

மின்னல் குழலை மேகம்எனப்
பெருகும் களிமா மயில்அகவும் ;
பிறமும் வளைக்கை கஞ்சம்எனப்
பிரியாது அனங்கள் உவந்தேறும் !

வன்னப் பணைசூழ் திருத்தணிகை
வாழ்வே ! வருக ; வருகவே ;
மலையான் உதவும் உமையாள்கண்
மணியே ! வருக , வருகவே. ருஅ

— கந்தப்ப தேசிகர்

## ௫௬-ஆவது பாட்டின் பொருள்

**கருத்து:—** இனிய மாம்பழங்களைச் சேர்த்து அவற்றினாலே அடுப்புக் கூட்டி, உள்ளே உள்ள பூச்சி நீக்கப் பெற்ற வலம்புரிச் சங்கில் சிவந்த தேனை நீருக்குப் பதிலாக ஊற்றி உலை வைத்து, பாம்புகள் உமிழ்ந்த செழுமையான சிறந்த நாகரெத்தினங்களைக்கொண்டு கடுமையான நெருப்பை மூட்டி, மாதுளைப் பழங்களை உடைத்து அவற்றின் விதைகளை எடுத்து அரிசியாகப் போட்டு, சமையல் செய்து, வாழை இலையில் கொட்டி வாழைப் பழத்தைப் பிழிந்து பொருந்துமாறு கலந்து கறி செய்து, சோலையிலேயுள்ள மாதவிப் பந்தரின் கீழே, மீனனைய விழிகளைப் பெற்ற சிறுமியர் கூட்டம் செய்த மணல் வீடு,

நினைப்புக்கு உட்பட்ட அகில அண்டமும் படைத்தும் காத்தும் மறைக்கும் இணையற்ற செல்வனாகிய உனக்கு ஒரு பொருட்டாகுமா ?

சிறிய எங்களுடைய சிறு வீட்டை அழிக்காதே ;

தேர் ஓடும் வீதியை உடைய திருப் போரூர் முருகா! சிறியேம் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்.

**அரும்சொற்பொருள் :—** ஊன் : தசை. கதலிமடல் : வாழை இலை. அளவி : கலந்து. வண்டல் : மணல் வீடு.

திருப்போரூர் என்னும் இத்தலம் தாம்பரத்திலிருந்து சுமார் க0 மைல் தொலைவிலுள்ளது.

## திருப் போரூர்ப் பிள்ளைத் தமிழ்

### சிற்றில் பருவம்

தேமாங் கனியின் அடுப்புஅமைத்து,
திகழ்ஊன் கழிந்த வலம்புரியில்
செந்தேன் உலைப்பெய்து. அரவுஈன்ற
செழுமா மணிவெங் கனல்மூட்டி,

பூமா தளையின் விதைஅரிசி
புகட்டிச் சமைத்துக் கதலிமடல்
பொங்கப் பிழியும் அதன்கனியும்,
பொருந்த அளவிக் கறிஅட்டுக்

காமா தவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண் ஆயம் இழைத்தவண்டல்,
கருதும் புவன கோடிஎலாம்
கரந்தும் படைத்தும் காக்கும்ஒரு

சீமான் உனக்கோர் இலக்கோசொல்?
சிறியேம் சிற்றில் சிதையேலே;
தேர்ஊர் வீதிப் போரூரா!
சிறியேம் சிற்றில் சிதையேலே, ருசு

— சிதம்பர சுவாமிகள்

# தாலாட்டு

ராய. சொ.

## பெண்பால்

மானே! மரகதமே!
மாமயிலே! மாதரசே!
தேனே! திரவியமே!
தீங்கனியே! கண்வளராய் சூ௦

சோலை அருங்கிளியே!
சுந்தரியே! தெள்அமுதே!
காலைக் கதிரொளியே!
கண்மணியே! கண்வளராய் சூ௧

கோல மணிவிளக்கே!
கோமளமே! கோகிலமே!
பாலைப் பழிக்கும்மொழிப்
பாவையே! கண்வளராய் சூ௨

குழலின் ஒலிஅதனைக்
கோதாக்க வந்த
மழலை மிழற்றும்அரு
மாமணியே! கண்வளராய் சூ௩

**அரும்சொற்பொருள் :—** கண்வளர்தல் : உறங்குதல். சூ௨. கோலம் : அழகு. கோமளம் : இளமை. கோகிலம் : குயில். சூ௩. குழல் : புல்லாங்குழல். கோது : குற்றம்.

# தாலாட்டு

நாட்டைப் பிடித்தபிணி
நல்குரவும் அன்னனவும்
ஓட்டம் எடுக்கவந்த
ஒப்பனையே! கண்வளராய் ௬௪

காந்தி அறம்அதனைக்
காசினிஎ லாம்பரப்பப்
போந்த இளங்கொடியே!
பொன்னே! நீ கண்வளராய் ௬௫

திருவள் ளுவர்குறளின்
சீர்த்திதனைச் சீரா
மருவப் பிறந்தபெரு
மாமகளே! கண்வளராய் ௬௬

கம்பர் தமிழ்இன்
கவியின் உயர்கருத்தை
இம்பர் வளர்க்கவரும்
ஏந்திழாய்! கண்வளராய் ௬௭

**அரும்சொற்பொருள்** :— ௬௪. நல்குரவு : வறுமை. ௬௫. காசினி : உலகம். ௬௭. இன் : இனிமை. இம்பர் : இவ்வுலகம். ஏந்திழாய் : ஆபரணங்களை அணிந்தவளே.

## தாலாட்டு

செஞ்சொல் இளங்கோ
சிலம்புக் கவிஅழகை
அஞ்சொல் அமிழ்தாலே
ஆண்டுஅருளக் கண்வளராய் ௬அ

சேக்கிழார் நூலில்உள
சீர்திருத்தக் கொள்கையெலாம்
வாக்கினுல் கூறி
வளர்த்துஅருளக் கண்வளராய் ௬௯

பாரதியார் பாட்டின்உயர்
பண்பைஇப் பார்அறியச்
சீரதாச் செப்புதற்குச்
செல்வமே! கண்வளராய் ௭0

வள்ளுவனை ஈன்றெடுத்த
மங்காத சீர்த்தியுடைத்
தெள்ளு தமிழ்வளரச்
சீரே!நீ கண்வளராய் ௭௧

**அரும்சொற்பொருள் :—** ௬அ. சிலம்பு : சிலப்பதிகாரம்
௬௯: சேக்கிழார் நூல் : பெரியபுராணம். ௭0.
பார் : உலகம்.

## தாலாட்டு

தொல்காப் பியர்செய்த
தொன்மையுடைச் சீர்நூலின்
ஒல்காப் பெருமை
ஒளிபெறநீ கண்வளராய் எஉ

சங்கத் தமிழ்இனிய
சால்புஉடைய நூல்ஆய்ந்தே
எங்கள் தவம்விளக்க
ஏதம்இலாய்! கண்வளராய் எ௩

உலகின் மொழியெல்லாம்
ஓதிஉளங் கொண்டே
அலகுஇல் புகழ்பரப்பி
ஆண்டுஅருளக் கண்வளராய் எச

ஆற்றல் நிறைந்தோர்
அருளிய நூற்பரப்பின்
சாற்றைப் பிழிந்துஉதவத்
தையலே! கண்வளராய் எ௫

**அரும்சொற்பொருள் :—** எஉ. தொன்மை : பழமை. ஒல்கா : குறையாத. எ௩. சால்பு : தகுதி. ஏதம் : குற்றம். எச. அலகு : அளவு. எ௫. ஆற்றல் ; வலிமை. சாறு : ரசம்.

## தாலாட்டு

பெண்ணைக் குறைவாகப்
பேசும்நூற் கொள்கையெலாம்
மண்ணிற் புதைக்க
வயிரியே! கண்வளராய் எசு

ஒக்கும் பிறப்பில்
உயிரெல்லாம் என்றுஉரைத்த
தக்கோன் வளர்த்த
தமிழ்வளரக் கண்வளராய் எஎ

கணவன் பிழைபொறுத்த
கண்ணகிபோற் கற்பை
அணிகொள் பொறுமையோடு
ஆள்வதற்குக் கண்வளராய் எஅ

காதல்இது என்றுஉலகோர்
காண வனம்புகுந்த
சீதைஅறம் போற்றவளர்
செல்வியே! கண்வளராய் எகூ

**அரும்சொற்பொருள் :—** எசு. வயிரி : வயிரங்கொண்டவள். எஎ. தக்கோன் : திருவள்ளுவன்.

# தாலாட்டு

சமத்துவம்இல் லாநீதி
தன்னை அறுக்க
இமைப்பொழுதும் தாழாமல்
இன்பமே ! கண்வளராய் அ௦

பெண்அடிமை என்றுசொலும்
பேதைமட வார்தங்கள்
கண்திறக்க வந்தபெரும்
கற்பகமே ! கண்வளராய் அக

ஓதுகலை தம்மைஎலாம்
ஓதிஉணர்ந்து உள்ளத்தில்
தீதுஅகற்றி நன்றுகொளத்
தேனே ! நீ கண்வளராய் அஉ

வேற்றுநாடு ஆள
விழையும் மடக்கொள்கை
ஏற்றுளார் புன்மை
இடியநீ கண்வளராய் அங

**அரும்சொற்பொருள் :—** அக. பெண்ணை அடிமை எனக் கூறுவோரே, பேதைமடவார். அங. விழையும் : விரும்பும். புன்மை : இழிவு.

# தாலாட்டு

எப்பொருளை யார்சொலினும்
    ஏலவே ஆய்ந்துஅறிந்து
அப்பொருளை ஆளவந்த
    ஆதரவே! கண்வளராய் அச

சாதியால் மேல்கீழும்
    சாதிக்கும் வன்கண்ணர்
பேதையார் என்றுஅறியப்
    பெண்அரசே! கண்வளராய் அரு

வெற்றி தனைநாடி
    வீணன் சிறைஇருந்த
பொற்பூ மகள்அனைய
    பூவையே! கண்வளராய் அசா

வன்னக் கிளியே! நான்
    வாழவந்த ஏழ்இசையே!
சொன்ன மணிவிளக்கே!
    தோகையே! கண்வளராய் அஎ

**அருஞ்சொற்பொருள்** :— அச. ஆய்ந்து : ஆராய்ந்து : அசா. வீணன், இங்கு இராவணன். பூவை : நாகணவாய்ப் பறவை. அஎ. வன்னம் : அழகு. சொன்னம் : தங்கம். தோகை : மயில்.

## தாலாட்டு

அன்னமே! ஆர்உயிரே!
அற்புதமே! பேர்அறிவே!
கன்னலே! கற்கண்டே!
காதலே! கண்வளராய் அஅ

வள்ளலே! கண்ணே!
மனதில்உறை மாமணியே!
தெள்ளு தமிழே!
திருவருளே! கண்வளராய் அகூ

எல்ஆர் மொழிபலவும்
ஏன்றகலை எல்லாமும்
சொல்ஆர் கலைமகளாம்
சுந்தரியும் நீதானே! கூ0

நல்ல தொழில்வளர
நாடுசெழித்து ஓங்கிமிகச்
செல்வம் கொழிக்கும்
திருமகளும் நீதானே! கூக

**அரும்சொற்பொருள் :—** அஅ. கன்னல் : கரும்பு. கூ0. எல் : ஒளி. ஏன்ற : பொருந்திய.

# தாலாட்டு

தானம் தவம்இரண்டும்
தாரணியில் நின்றுஓங்க
ஞானம் விளங்கவரும்
நன்மகளும் நீதானே ! கூஉ

சிறக்கும் தமிழ்மொழியில்
சீலம் செறிந்த
அறத்தை இனிதுஅருளும்
ஔவையாள் நீதானே ! கூங

மற்றேன் மனம்புகுதல்
மாசுமகட்கு என்றுஅந்நாள்
சொற்ற மருதிஎனும்
தொல்மகளும் நீதானே ! கூச

தொட்டுஇழுத்த தம்பி,
துரியோ தனக்கொடியோன்
பட்டுஅழியச் செய்தபுகழ்ப்
பாஞ்சாலி நீதானே ! கூரு

**அரும்சொற்பொருள் :—** கூஉ. தாரணி : உலகம். கூங. சீலம் : ஒழுக்கம். கூச. மாசு : குற்றம். சொற்ற : சொன்ன. மருதி, பிறர் நெஞ்சு புகுதல் குற்றம் எனக்கொண்ட தமிழ்நாட்டு இலக்கியப் பெண். கூரு. தம்பி, துச்சாதனன். பாஞ்சாலி : திரௌபதை.

## தாலாட்டு

பாஞ்சால மங்கையரைப்
 பண்டு பலகொடுமை
தாம்செய்தார் மாளத்
 தரித்தவளும் நீதானே! கூசு

கல்வி தனிற்பெரிய
 கம்பனார் பெற்றுஎடுத்த
செல்வத் தமிழ்ச்சீதைச்
 செம்பொனாள் நீதானே! கூஎ

வல்வரவு வாழ்வார்க்கு
 உரைஎன்ற வள்ளுவன்வாய்ச்
சொல்லாற் பிரிவுஉரைக்கும்
 சுந்தரியாள் நீதானே! கூஅ

பெண்மைக்கு இலக்கணம்செய்
 பேராளர் சொன்னபடி
ஒண்மைப் புகழ்முழுதும்
 ஓங்கியவள் நீதானே! கூகூ

**அரும்சொற்பொருள் :—** கூசு. பண்டு : முன்பு. தாம் செய்தார், வெள்ளையர்கள். கூஎ. செம்பொனாள் : திருமகள். கூஅ. வல்வரவு : விரைந்த வருகை.

# தாலாட்டு

தீர்த்தன் அறம்வளர்த்த
செல்வினும் எங்கள்சீர்ச்
சாத்தனார் சாற்றுமணி
மேகலையும் நீதானே! க00

பாடிக் கொடுத்தும்
பரமன் அடியிணைக்குச்
சூடிக் கொடுத்தஇளந்
தோகையாள் நீதானே! க0க

சீரைப்பார்த் துக்கணவன்
செல்லத் தமிழ்பாடிக்
காரைக்கால் வந்தஉயர்
காரிகையும் நீதானே! க0உ

செங்கோன்மை நாட்டியே
தென்பாண்டி நாடுஅளித்த
மங்கையர்க்குப் பேர்அரசாம்
மாதரசி நீதானே! க0௩

**அரும்சொற்பொருள் :—** க00. தீர்த்தன் : புத்தபகவான். சாத்தனார், மணிமேகலை நூல் செய்த சீத்தலைச் சாத்தனார். க0க. சூடிக்கொடுத்த இளந்தோகை : ஆண்டாள். க0உ. கணவன், பரமதத்தன். காரிகை, காரைக்கால் அம்மை.

க்கங்

# தாலாட்டு

தெள்ளு தமிழில்
திறம்பா அறம்உரைத்த
வள்ளுவனை ஈன்றெடுத்த
மங்கைநல்லாள் நீதானே! ௧௦௪

பைம்பொன் மணியில்
பதிக்கும் கவிபுனைந்த
கம்பன் தனைப்பெற்ற
கல்விமான் நீதானே! ௧௦௫

செஞ்சொல் அமிழ்தால்
சிலம்பை இசைத்தஉயர்
அஞ்சொல் இளங்கோவின்
ஆய்ச்சியாள் நீதானே! ௧௦௬

காதல் தமிழில்
கவின்ஆர் கவிபுனைந்த
போதம் மிகுந்த
புலவர்தாய் நீதானே! ௧௦௭

**அரும்சொற்பொருள் :—** ௧௦௪. திறம்பா : மாறுபடாத. ௧௦௬. சிலம்பு : சிலப்பதிகாரம். ஆய்ச்சியாள் : தாயார். ௧௦௭. போதம் : அறிவு.

## தாலாட்டு

முதுமை எழிலோடு
　　மூஉலகும் போற்றும்
புதுமை கலந்தஉயர்
　　பெண்அரசி நீதானே! கഠஅ

பீடு பிறங்கஅரும்
　　பெண்மைசிறந்து ஓங்கிமிக
நாடு செழிக்கவந்த
　　நல்லியலாள் நீதானே! கഠகூ

---

**அரும்சொற்பொருள் :—** கഠகூ. பீடு : பெருமை.
பிறங்க : விளங்க.

# தாலாட்டு

*ராய. சொ.*

## ஆண்பால்

கொஞ்சு கிளியே !நற்
குஞ்சரமே ! கோளரியே !
அஞ்சொல் அமுதே !என்
ஆர்உயிரே கண்வளராய் கக0

விஞ்சு கலைகள்எலாம்
மேவப் பிறந்தஉயர்
மஞ்ச ! அறங்கள்
வளரநீ கண்வளராய் ககக

கட்டிக் கரும்பே !என்
கற்கண்டே ! சர்க்கரையே !
தொட்டில் அசையஉயர்
தோன்றல் ! நீ கண்வளராய் ககஉ

இந்தியத் தாய்விலங்கை
ஈர்ந்துஎறிய வந்தபெரும்
மைந்தா ! அருந்தவமே !
மாமணியே ! கண்வளராய் கக௩

**அருஞ்சொற்பொருள் :—** கக0. குஞ்சரம் : யானை. கோளரி : சிங்கம். ககக. விஞ்சு : மேலான. மஞ்ச : மைந்த. கக௩. ஈர்ந்து : பிளந்து.

## தாலாட்டு

மருமலரே ! வாழ்வே !
வனப்பே ! கனியே !
அருமந்த செல்வமே !
ஆசையே ! கண்வளராய் ககச

அண்ணலே ! அன்பே !
அருளே ! அறிவே !என்
கண்ணே ! கருமணியே !
காதலே ! கண்வளராய் ககரு

மாதுஅடிமை கொண்டக்கால்
வாழ்க்கைஇனி யாதுஎனவே
போதம்இலார் புந்திகொளப்
போந்தவனே ! கண்வளராய் கககூ

தீண்டாமை வேண்டும்எனச்
செப்புகின்ற புன்மதியைப்
பூண்டோடு கீண்டுஎறியப்
போந்தவனே ! கண்வளராய் ககஎ

**அரும்சொற்பொருள் :—** ககச. மரு : மணம். கககூ. போதம் இலார் : அறிவற்றவர். புந்தி : புத்தி. போந்தவன் : வந்தவன். ககஎ. புன்மதி : அற்பப் புத்தி. கீண்டு : பிளந்து.

## தாலாட்டு

சூதுசெய்த ராவணனைத்
துள்ள முடிதுணித்த
சீதைமண வாளா !என்
செல்வமே! கண்வளராய் ககஅ

இந்திரசித்து என்போன்
இரண்டுதுண்ட மாய்விழச்
சுந்தரப்பொன் வில்தாங்கு
தூமணியே! கண்வளராய் கககூ

இராமா யணக்கதையில்
ஈடுஇலான் என்னப்
பராவு புகழ்சேர்
பரதனே! கண்வளராய் கஉ0

வாய்ந்த பொறை,கருணை,
வண்மை, அறிவு,நடை,
சாந்தம், புனிதம்,நிறை
தன்மனே! கண்வளராய் கஉக

**அரும்சொற்பொருள் :—** கககூ. தூமணி : இலக்குவன். கஉக. பொறை : பொறுமை. வண்மை : வள்ளல் தன்மை. நடை : ஒழுக்கம். தன்மன் : பாண்டவர் களில் மூத்தவனுகிய பாரதத் தலைவன்.

## தாலாட்டு

பராவுபெரு வில்வளைத்துப்
பாஞ்சாலன் பெற்ற
துரோபதையை மாலையிட்ட
சூரா !நீ கண்வளராய் கஉஉ

தந்தைக்கா இன்பம்
தனைத்துறந்த வீட்டுமன்நேர்
மைந்த !பெரும் பேர்அறங்கள்
மல்கிடநீ கண்வளராய் கஉங

பார்த்தனார் தாம்உய்யப்
பார்உய்யக் கீதைமொழி
பார்த்திப ! பாரதஞ்செய்
பண்ணவனே! கண்வளராய் கஉச

தீதுஇல் அறம்பிடித்துத்
திண்மையுடன் சங்கிலியைக்
காதல் மணம்புணர்ந்த
சுந்தரனே ! கண்வளராய் கஉரு

**அருஞ்சொற்பொருள் :—** கஉஉ. சூரன் : அருச்சுனன். கஉங. தந்தைக்காக பெண் இன்பத்தையே துறந்தான் வீட்டுமன் என்னும் பெரியோன் என்பது பாரதக் கதை. கஉச. பார்த்திபனும் பண்ணவனும் கண்ணபிரான். கஉரு. சங்கிலி : சங்கிலிநாச்சியார். சுந்தரன் : சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

## தாலாட்டு

கருணை உருவெடுத்த
காந்திஅறம் போற்றிப்
பெருமை பிறங்கப்
பெரியோனே! கண்வளராய் கஉசு

நாட்டின் விடுதலைக்கு
நல்உயிரே னும்சிறிதும்
வாட்டம் தவிர்த்துஈய
மாமகனே! கண்வளராய் கஉஎ

உலகில் பெரியாராம்
ஒப்புஇலாக் காந்தி
அலகுஇல் புகழ்பரப்ப
அண்ணலே! கண்வளராய் கஉஅ

சாதியால் நாம்பெரியோம்
என்றுஉரைக்கும் சாரம்இலார்
ஆதரவு மாண்டுஒழிய
அம்மானே! கண்வளராய் கஉகூ

**அரும்சொற்பொருள் :—** கஉசு. பிறங்க : விளங்க. கஉஎ. தவிர்த்து : நீக்கி. கஉஅ. அலகு : கணக்கு.

# தாலாட்டு

இப்புவிஎ லாம்உயர
ஏதம்இலாக் காந்திசொலும்
ஒப்புஅரிய கொள்கைநனி
ஓங்குதற்குக் கண்வளராய் கடு0

வள்ளுவன் செய்குறளின்
மாண்பை உலகுஅறியத்
தெள்ளு தமிழ்விளங்கச்
செம்மலே! கண்வளராய் கடுக

செந்தமிழில் இராமகதை
செய்ததனிச் சீர்ப்புலவன்
தந்தகவி நின்றுஓங்கத்
தண்ணளியே! கண்வளராய் கடுஉ

முந்தைப் பெரியோர்
மொழிந்தவற்றை ஆய்ந்துஅவர்தம்
சிந்தை நலம்பிடிக்கச்
சீராளா! கண்வளராய் கடுடு

**அரும்சொற்பொருள் :—** கடு0. நனி : மிகுதி. கடுக. மாண்பு : சிறப்பு. கடுஉ. தண்ணளி : குளிர்ந்த கருணை.

# தாலாட்டு

பெரிய கருத்துஅதனைப்
பேசுமொழி தம்முள்
அரிய தமிழ்வளர
ஆதரவே! கண்வளராய் ௧௱௪

ஆண்பெண் சமம்என்று
அவனி முழுதுஉணரும்
மாண்பை இனிதே
வளர்ப்பதற்குக் கண்வளராய் ௧௱௫

தீமை முழுதகலத்
தேயம் செழித்துஓங்க
வாய்மை வளர
மகனே!நீ கண்வளராய் ௧௱௬

சீலம் வளரச்
சிறுமை புறங்காட்ட
ஞாலம் உயர்வடைய
நல்லோய்!நீ கண்வளராய் ௧௱௭

**அரும்சொற்பொருள் :—** ௧௱௫. அவனி : உலகம்.

# தாலாட்டு

செல்வமே! தேனே! என்
தீங்கரும்பே! மாமருந்தே!
பல்கு வளமே! நல்
பாலகனே! கண்வளராய் ௧௫௮

ஆசைக் கனியே!
அருந்தவமே! பேர்அருளே!
ஓசைத் தமிழே!
உயிர்க்குஉயிரே! கண்வளராய் ௧௫௯

தம்பிக்கு அரசோடு
தாரணியும் தான்கொடுத்து
வெம்பு வனம்புகுந்த
மேதகவோன் நீதானே! ௧௬௦

வேடன் தனைக்குரங்கை
விடணனைக் காதலுடன்
கூடித் துணையாக்கொள்
கொற்றவனும் நீதானே! ௧௬௧

**அரும்சொற்பொருள் :—** ௧௫௮. பல்கு : நிறைந்த. ௧௬௦. தம்பி, பரதன். வெம்பு : சுடுகின்ற. மேதகவோன் : இராமன். ௧௬௧. வேடன், குகன். குரங்கு, சுக்கிரீவன். கொற்றவன், இராமன்.

# தாலாட்டு

தோளோய்ந்து ராவணனுர்
தோற்றதுகண்டு இன்றுபோய்
நாளைவா என்றுஅருளும்
நல்லோனும் நீதானே! கசஉ

முடிதுறந்து வாடி
முனைவன்அடி சூடிச்
சடைவளர்த்து நின்ற
தனிப்பரதன் நீதானே! கசரு

அறந்தானே என்னும்
அயோத்திவரும் மன்பின்
பிறந்தானும் என்னப்
பிரியாதான் நீதானே! கசசு

தீதுபுரி ராவணனின்
தீச்செய்கைக்கு உள்உடைந்த
சாதிஎனும் புன்நெறியைச்
சாராதான் நீதானே! கசரு

**அரும்சொற்பொருள் :—** கசஉ. நல்லோன், இராமன். கசரு. முனைவன், இராமன். அடி, பாதுகம். கசசு. பிரியாதான், இலக்குவன். கசரு. உள் உடைந்த : மனம் உடைந்துபோன. சாராதான், விடணன்.

# தாலாட்டு

ஏலும் உலகை
இரண்டுஅடியி னல்அளந்த
சீலம் செறிந்ததிரு
வள்ளுவனும் நீதானே ! கசரு

செவிக்குத்தேன் ஆ,ராமன்
காதை திருத்தும்
கவிக்குத் தலைவனும்
கம்பவள்ளல் நீதானே ! கசஎ

ஒழுக்கம் இதுஎன்று
உலகுஉணரக் காட்டும்
விழுப்பம் மிகும்எங்கள்
மெய்க்காந்தி நீதானே ! கசஅ

சாந்தம் பொறைகருணை
தண்மை புனிதம்இவை
ஏந்து புகழ்சேர்
எழிற்காந்தி நீதானே ! கசகூ

**அரும்சொற்பொருள் :—** கசரு. இரண்டுஅடி : திருக்குறள் என்ற இரண்டு வரி. செறிந்த : நிறைந்த. கசஅ. விழுப்பம் : மேன்மை.

## தாலாட்டு

இத்தரையில் எந்நாளும்
ஈடுஇல்லான் என்றுஉரைக்கும்
புத்திரிபாய் பெற்றுஎடுத்த
புண்ணியனும் நீதானே! க௫0

கொல்லு படைவரினும்
கொஞ்சமும்அஞ் சாதுகடன்
ஒல்லும் வகைசெய்
உயர்காந்தி நீதானே! க௫க

இறைமை பெறஎங்கும்
இல்லாப் புதிய
முறைமை கடைப்பிடித்த
மோகனதாஸ் நீதானே! க௫உ

வேர்மாளத் தீண்டாமை
வேண்டும் படிஅருளி
ஏர்வாடாக் கோவில்உறை
எம்மானும் நீதானே! க௫௩

அரும்சொற்பொருள் : — க௫0. புத்திரிபாய், காந்தியடிகளுடைய தாயார். புண்ணியன், காந்தியடிகள். க௫க. ஒல்லும்வகை. : ஏற்றபடி. க௫உ. புதிய முறைமை என்றது சத்தியாக்கிரகப் போரை.

## தாலாட்டு

மன்னவர்க்கும் அஞ்சாது
மாண்டுஅதனுல் இப்புவியில்
இன்னல்அதை வென்றபுகழ்
என்னப்பன் நீதானே! கருச

இலக்கியம்எல் லாம்சொல்
எழிற்புலவர் எல்லாம்
விலக்கம்இன்றி ஓர்உருவாய்
மேவியவன் நீதானே! கருரு

இறையை எழில்ஆரும்
இன்தமிழில் பாடும்
குறையில் அடியர்உருக்
கொண்டவனும் நீதானே! கருசா

பிறப்புஉரிமை பேணிப்
பெரியதுயர் எல்லாம்
இறக்கும் வரைப்பொறுக்கும்
எம்மானும் நீதானே! கருஎ

**அரும்சொற்பொருள் :—** கருச. இன்னல் : துயரம். என்அப்பன் : எங்கள் திருநாவுக்கரசு சுவாமிகள். கருரு. மேவியவன் : பொருந்தியவன். கருசா. அடியர் : இறைவனடியார்.

## தாலாட்டு

உலகம் தனைத்திருத்தி
ஓங்கிஉயர் கொள்கை
நிலவப் பிறந்துஅருளும்
நேர்மைஉளான் நீதானே! க௫அ

தருமம் தழைக்கத்
தரணி செழிக்க
அருமை விளங்கவந்த
ஆரமுது நீதானே! க௫௯

பிள்ளைப் பாட்டு முற்றும்

அரும்சொற்பொருள் :— க௫௯. ஆர்அமுது : நிறைந்த தேவாமிர்தம்.

# பாட்டு முதற் குறிப்பு அகராதி

மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை.

